# தர்மசக்கரம்





ருத்ரோத்காரி ௵ ஐப்பசி மீ சக்கரம் 32 ஆரம் 10

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

# சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்

மதமாற்றம், சமூகத்தில் காணப்படும் தர்மானுஷ்டானக் குறைவு இவை களுக்குப் பரிகாரமாக மக்கள் மனதில் நல்ல உணர்வுகளைத் தூண்டி பக்தி வழியில் வழி நடத்துவதற்கு ஒரு நல்ல உபாயமாக தர்ம சக்கரம் மக்களில் பலருக்குக் கிடைக்கவேண்டுமெனக் கருதுகிறோம். நம் அன்பர்களில் பலரும் இக்கருத்தைத் தெரிவிக்கிறார்கள். ஆகவே நம் சந்தாதாரர்கள் தாங்களே தர்ம சக்கரத்தைப் பயன்படுத்தவும் மற்றவர்களுக்குத் தந்து படிக்க உதவவும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துத் தந்து உதவும்படியும் வேண்டுகிறோம்.

தர்ம சக்கரத்தில் வரும் விஷயங்கள் செய்தித்தாள்களில் உள்ளவை போன்று தாற்காலிகமானவைகளாக இல்லாமல் நிரந்தரமான தத்துவ ஆராய்ச்சி களாக இருக்கின்றன. சந்தர்ப்பம் வாய்க்கும் பொழுதெல்லாம் திரும்பவும் வாசிக்கக் கூடிய ஒரு நூலாக இது அமைகிறது. ஆதலால் ஓராண்டுக்கான பன்னிரண்டு தர்ம சக்கர இதழ்களையும் பொருளடக்கத்துடன் பைண்டு செய்து வைத்துக்கொண் டால் அது ஒரு நல்ல புத்தகமாக அமையும். நாம் படிப்பதற்கும் மற்றவர்களுக் குப் படிக்கத் தருதற்கும் அது வசதியாக இருக்கும்.

ஆகவே அன்பர்கள் முயன்று புதிய சந்தாதாரர்களை அறிமுகப்படுத்திப் பலரையும் ஆத்மிக வாழ்க்கையில் ஈடுபடச் செய்யக் கோருகிறோம். குறிப்பிட்ட அளவே பிரதிகள் அச்சாக்கப்படுவதால் புதுப்பித்துக்கொள்ள வேண்டிய பழைய சந்தாதாரர்கள் உடன் புதுப்பித்துக்கொண்டு மற்றும் பலரையும் புதிய சந்தாதாரர் களாகச் சேர்த்துத்தரும் அருட்பணியில் ஈடுபடும்படி கேட்டுக்கொள்கிறோம்.

பொருளாதாரத்தில் எந்த நிலையில் உள்ளவர்களுக்கும் தர்ம சக்கரம் கிடைக்கவேண்டும் என்னும் நோக்கத்துடன் சகாய சந்தா, சாதாரண சந்தா, டிபாசிட் சந்தா, அரசினர் நூல் நிலையங்களுக்கு இலவசமாக அனுப்புதல் ஆகிய முறைகளை நடைமுறையில் வைத்துள்ளோம்.

சந்தா விவரம் பொருளடக்கத்தின்கீழ் தரப்பட்டுள்ளது.

**ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்**
திருப்பராய்த்துறை-639 115
திருச்சி ஜில்லா.

# தர்ம சக்கரம்
## மாத சஞ்சிகை

| சக்கரம் 32 | ருத்ரோத்காரி ஹு ஐப்பசி மீ | ஆரம் 10 |
|---|---|---|


## பொருளடக்கம்




## சந்தா விவரம்

டிபாஸிட் சந்தா : ரூ. 150 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்துவிட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும்வரையில் மாதந்தோறும் தர்ம சக்கரம் பத்திரிகை தங்களுக்கு வந்து கொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தா செலுத்திப் புதுப்பிக்கவேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாஸிட்செய்த ரூபாய் நூற்றைம்பதையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

ஆண்டு சந்தா : ரூ. 15 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

சகாய சந்தா : மாத வருவாய் ரூ. 200 அல்லது ஆண்டு வருவாய் ரூ. 2400க்கும் குறைவாக உள்ளவர்கள் ஆண்டு சந்தா பதினைந்து செலுத்த இயலாது இருந்தால் ரூபாய் பத்து அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவிநிதி' யினின்று ஈடுசெய்து கொள்கிறோம். தெய்விக விஷயமாதலால் ரூ. 15 செலுத்த இயலுகிறவர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்தவேண்டாம்.

தமிழ் நாட்டிலும் பாண்டிச்சேரியிலும் உள்ள அரசாங்கப் பொது நூலகங்கள் அனைத்துக்கும் தர்ம சக்கரம் அன்பர்களின் உதவியால் தொடர்ந்து அனுப்பப்பெறுகிறது. நூலக நிர்வாகியிடம் கேட்டுப்பெற்றுப் படித்துப் பயனடையக் கோருகிறோம்.

உள்நாடு தனி இதழ் ரூ. 1-50 வெளிநாடு தனி இதழ் ரூ. 3-00

**உள்நாடு வருட சந்தா: ரூ. 15-00 வெளிநாடு வருட சந்தா: ரூ. 35-00**

# அந்தர்யோக விவரங்கள்

**சேலம் ஜில்லா—ராசிபுரத்தில் 23—10—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* *தெய்வீக வாழ்க்கைச் சங்கம்*
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**திருநெல்வேலி ஜில்லா—பாளையங்கோட்டையில் 23—10—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* *ஸ்ரீ மணகாவலம்பிள்ளை கல்யாண மண்டபம்*
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி திவ்யானந்தர்

**திருநெல்வேலி ஜில்லா கோவில்பட்டியில் 23—10—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* *ரயில்வே ஸ்டேஷனுக்கருகிலுள்ள லாயல்மில் ஆரம்பப்பாடசாலை*
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

**திருநெல்வேலி ஜில்லா—தூத்துக்குடியில் 30—10—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* *சிவன் கோவில் தெருவிலுள்ள சச்சிதானந்த சபை*
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி குஹானந்தர்

**சேலத்தில் 6—11—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* *ஸ்ரீ சாரதா கல்லூரியின் பிரார்த்தனைக் கொட்டகை*
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
*உணவு வசதி:* *பகல் உணவுக்கு ரூ. 1-50 செலுத்திச் சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.*

**பெரியார் ஜில்லா—ஈரோட்டில் 13—11—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* *ஈரோடு மஞ்சள் வியாபாரிகள் சங்கம், பார்க் ரோடு*
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

---

*அந்தர்யோக நடைமுறையில் நாமஜபம், தியானம், உபந்யாசம், மௌனம், ஸத்ஸம்பாஷணை முதலியவை அடங்கும். உபந்யாசங்கள் யோகம், பக்தி, ஞானம் முதலியவைகளைப்பற்றி நடைபெறும். ஸத்ஸம்பாஷணையில் அன்பர்கள் தங்கள் சந்தேகங்களை நீக்கிக்கொள்ளலாம். விருப்பமுள்ள அன்பர்களும், தாய்மார்களும் அந்தர்யோகங்களில் கலந்துகொள்ளலாம். ஆனால் கைக்குழந்தைகளுடன் வரும் தாய்மார்களும், பன்னிரண்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும் கலந்துகொள்ள அனுமதிக்கப்படமாட்டார்கள்.*



प्रज्ञानं ब्रह्म

# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.


| சக்கரம் 32 | ருத்ரோத்காரி ஹூ ஐப்பசி மீ | ஆரம் 10 |
|---|---|---|


## பிரார்த்தனை

क्व स्वप्नः क्व सुषुप्तिर्वा क्व च जागरणं तथा ।
क्व तुरीयं भयं वापि स्वमहिम्नि स्थितस्य मे ॥

— अष्टावक्रसंहिता

*க்வ ஸ்வப்ன: க்வ ஸுஷுப்திர்வா க்வ ச ஜாகரணம் ததா ।*
*க்வ துரீயம் பயம் வாபி ஸ்வமஹிம்னி ஸ்திதஸ்ய மே ॥*

— அஷ்டாவக்ரஸம்ஹிதா

கனவு, கனவற்ற உறக்கம், விழிப்பு நிலை, துரியம், பயம் ஆகிய யாவற்றையும் கடந்தநிலை என்னுடைய நிஜ சொருபமாம். சுஷுப்தி அவஸ்தையில் அல்லது கனவற்ற உறக்கத்தில் ஜீவகோடிகள் அனைத்தும் பெறுகிற ஆனந்தம் பரமானந்தமேயாம்.

துஞ்சலும் துஞ்சலி லாத போழ்தினும்
நெஞ்சகம் நைந்து நினைமின் நாள்தொறும்
வஞ்சக மற்றடி வாழ்த்த வந்தகூற்
றஞ்சஉ தைத்தன அஞ்செ ழுத்துமே.

— சம்பந்தர் தேவாரம்

# அருள் விருந்து

பரத்தை ஆழ்ந்து பற்றிப் பிடி.

அன்பு அனைத்தையும் இனியதாக்குகிறது.

பேரானந்தம் உயிர்களனைத்துக்கும் பொதுவானதே.

உறுதிப்பாடும் தன்னம்பிக்கையும் படைத்தவனாயிரு.

உறுதிப்பாடும் அமைதியும் ஒன்று சேர்ந்து இலங்குகின்றன.

சமயப் பற்றில்லாத வாழ்வு சுக்கான் இல்லாத படகுக்கு நிகர்.

சத்தியத்தைக் கடைப்பிடிப்பவனைச் சத்தியம் காப்பாற்றுகிறது.

சரியான முன்னேற்றம் மனிதனுடைய தரத்தை நன்கு விளக்குகிறது.

கெட்டவர்களைப் புறக்கணிப்பதன் வாயிலாக அவர்களை நல்லவர்களாக்க முடியாது.

வாய்த்தவைகளுக்கெல்லாம் வாக்குறுதி தருபவன் அதை நிறைவேற்ற மாட்டான்.

சான்றோன் ஒருவன் முயற்சி ஏதும் இன்றிப் பெரிய பெரிய காரியங்களைச் சாதிக்கிறான்.

மன அமைதி சூழ்நிலையினின்று வருவதன்று. பரிபாகத்தினின்றே அது வந்தமைகிறது.

நீ கட்டும் மனக்கோட்டைகளனைத்தும் உன் ஆதிக்கத்துக்கு உட்பட்டவைகளாக வேண்டும்.

இடைஞ்சல்களைச் சரியாக அறிந்துகொள்ளாதவனுக்கு மேலும் மேலும் இடைஞ்சல்கள் வந்துகொண்டேயிருக்கும்.

பல தடவை தோல்வியடைந்தாலும் மனிதன் தன்னையே சார்ந்திருக்கட்டும். அறிவில்லாதவர்களைச் சார்ந்திருக்கலாகாது.

போர்க்களத்தில் ஆயிரக்கணக்கான உயிர்களைக் கொன்று அடைவது வெற்றியன்று. தன் மனதை வென்றவனே வெற்றி வீரனாகிறான்.

## பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

இரவு நேரம் சுமார் ஒன்பது மணி. பலராமன் திரைலோக்கியரை மற்றோர் அறைக்கு அழைத்துச் சென்று அவருக்கு ஆங்குச் சிற்றுண்டி வழங்கினர். அங்ஙனம் திரைலோக்கியர் பரமஹம்சருடைய முன்னிலையினின்று வேறு ஓர் அறைச்குப் போயிருந்தபொழுது அவரைப் பற்றியும் கருத்தில் அவரோடு ஒத்திருந்தவர்களைப்பற்றியும் பரமஹம்சதேவர் உரையாடினர்.

கிரீசர், மகேந்திரர் போன்ற ஏனைய பக்தர்களிடம் அவர் பகர்ந்ததாவது: "இக்கூட்டத்தினர் படைத்துள்ள பாங்கு எத்தகையது என்பது உங்களுக்குத் தெரியுமா? இவர்கள் கிணற்றுத் தவளை போன்றவர்கள். கிணற்றில் வசித்து வருகிற தவளைக்கு அக்கிணற்றைத் தவிர வேறு நீர்நிலை ஏதும் தெரியாது. அதுபோன்று இவர்கள் தங்களுடைய சம்பிரதாயங்களையும் கொள்கைகளையுமே அறிந்துள்ளார்கள். உலகில் வேறு பல கொள்கைகள் படைத்துள்ளவர்கள் இருக்கிறார்கள் என்பது இவர்களுக்குத் தெரியாது. இப்பிரபஞ்சத்துக்கு அப்பால் உள்ள பரமனிடமிருந்து ஊற்றெடுத்து வருகிற பேரானந்தத்தைப் பற்றி இவர்கள் ஒன்றும் அறியார்கள். ஆகையினல் இவ்வுலகம் தருகிற சிற்றின்பம் ஒன்றிலேயே பற்று வைத்து இவ்வுலகில் இவர்கள் உழன்று கொண்டிருக்கின்றனர்."

கிரீசரிடம் பரமஹம்சதேவர் புகர்ந்ததாவது: "இக்கூட்டத்தாரோடு நீ ஏன் வீண் விவாதம் பண்ணிக்கொண்டிருக்கின்றாய்? இவர்கள் இவ்வுலகத்தைப்பற்றியும் கேள்வி அளவில் அறிந்திருக்கும் கடவுளைப் பற்றியும் தாராளமாகப் பேசுகின்றார்கள். இறைவனிடத்திருந்து உதித்து வருகின்ற பரமானந்தத்தைப்பற்றி இவர்கள் ஒன்றுமே அறியமாட்டார்கள். பேரானந்தம் என்ன என்பதைப்பற்றி ஐந்து வயது சிறுவன் ஒருவனிடம் நாம் விளக்க முடியுமா? பிறர் சொல்லக்கேட்டு அறிந்துள்ள ஞானத்தைக்கொண்டு இவர்கள் கடவுளைப்பற்றிப் பேசுகிறார்கள். கிழவிமார்கள் கூச்சலிட்டுப் பேசுவதைச் சிறுவர்கள் காதுகொடுத்துக் கேட்டிருக்கிறார்கள். அங்ஙனம் அவர்கள் கேட்டறிந்துகொண்ட விஷயத்தை 'நான் வணங்கும் தெய்வத்தின்மீது ஆணையிட்டுப் பகர்கிறேன்,என்று சிறுவர்கள் இயம்புகின்றார்கள். அப்படி அவர்கள் இயம்புவதில் பொருள் ஏதும் இல்லை. உலகத்தவர்களுள் பெரும்பான்மையோர் பேச்சும் இத்தகையதேயாம்.

"அதைப் பற்றிக் கவலைப்படவேண்டியதில்லை. இத்தகைய பாங்கு படைத்துள்ள மனிதர்களைக் குறித்து நான் குறை ஏதும் கூறுவது கிடையாது. அகண்ட சச்சிதானந்தத்தைப் பாமரர் எல்லாரும் அறிந்துகொள்ள மாட்டார்கள். ஸ்ரீ ராமன் மானுட வடிவெடுத்து உலகில் அவதரித்திருந்ததைப் பன்னிரண்டு ரிஷிகள் மட்டுமே அறிந்துகொண்டார்கள். கடவுள் மானுட வடிவெடுத்து உலகில் அவதரித்திருக்கும் விஷயத்தை உலக மக்கள் எல்லாரும் அறிந்துகொள்ளமாட்டார்கள். ஒரு சிலர் அத்தகைய மூர்த்தியை அசாதாரண மனிதருள் ஒருவனாக எடுத்துக்கொள்கிறார்கள். இன்னும் சிலர் அவரை ஒரு ஞானி என்றோ, பக்தன் என்றோ, யோகி என்றோ பாகுபடுத்துகின்றனர். பரதத்துவத்தை அறியவல்ல ஒரு சிலரே ஸ்ரீராமன் போன்றவர்களை உள்ளபடி அறிந்துகொள்ள வல்லவர்களாகின்றனர்.

"பொருள் ஒன்றுக்கு ஒவ்வொருவனும் தன்னிடமுள்ள மூலதனத்தை அனுசரித்தே மதிப்புப் போடுகிறான். இங்கு மூலதனம் என்பது அவரவர் படைத்திருக்கும் சுய அறிவாம். செல்வம் மிகப் படைத்திருந்த பெருமகன் ஒருவன் தன்னிடமிருந்த வைரத்தைத் தன் வேலைக்காரனிடம் கொடுத்து, 'இதைக் கடைத்தெருவுக்குக் கொண்டுபோய்ச் சில கடைக்காரர்களிடம் காட்டு. அவர்கள் இதற்கு என்ன மதிப்புப் போடுகிறார்கள் என்று பார்ப்போம்' என்று ஆணையிட்டான். அவன் இட்ட ஆணைப்படி வேலைக்காரனும் நடந்துகொண்டான். முதன்முதல் அவன் அதை ஒரு கத்தரிக்காய்க் கடைக்காரனிடம் எடுத்துச் சென்றான். அவ

னிடம் அந்த வைரத்தைக் காட்டி அதற்கு அவன் என்ன விலை தருவான் என்று வேலைக்காரன் கேட்டான். கத்தரிக்காய்க் கடைக்காரனும் அதை வாங்கித் தன் உள்ளங்கையில் வைத்துக்கொண்டு நோட்டம் பார்த்தான். 'இது ஒரு நல்ல வஸ்துதான். இதற்கு இரண்டு கூடைக் கத்தரிக்காய் தரலாம்' என்று மதிப்புப் போட்டான். 'இன்னும் கொஞ்சம் சேர்த்துத் தரமாட்டாயா?' என்று வந்தவன் வேண்டினன். அதற்கு அந்தக் கத்தரிக்காய்க் கடைக்காரன், 'இல்லை, நண்பா, இரண்டு கூடை கத்தரிக்காயே மிக அதிகமானது. அதற்கு மேல் நான் ஒரு கத்தரிக்காயும் கூட்டித் தரமாட்டேன்; இஷ்டமிருந்தால் பண்டமாற்று முறையில் இப்பொருளை என்னிடம் ஒப்படைத்துவிட்டு நான் தருகிற இரண்டு கூடை கத்தரிக்காயை எடுத்துக்கொண்டு மகிழ்வுடன் திரும்பிப் போ. இல்லையேல் இதோ இந்தப் பொருளை நீயே கையில் எடுத்துக்கொண்டு போகலாம், என்று விடைவிடுத்தான். புன்னகை பூத்தவனுக வேலைக்காரன் தன் எஜமானனிடம் சென்று நிகழ்ந்ததைத் தெரிவித்தான். இப்பொழுது அவனை எஜமானன் ஒரு ஜவுளி வியாபாரியிடம் அனுப்பி வைத்தான். ஜவுளி வியாபாரி வைரத்தை வாங்கிப் பார்த்துப் பெருமகிழ்வு அடைந்தான். 'நண்பா, நீ எடுத்து வந்துள்ள இந்த வைரம் மிக நல்லது. நகை ஒன்று செய்து உடலை அலங்கரிப்பதற்கு இது நன்கு பயன்படும். இதற்காகவென்று நான் இரண்டு மூட்டை விலை உயர்ந்த ஜவுளியைத் தருகிறேன்' என்று ஜவுளிக் கடைக்காரன் அதற்கு மதிப்புப் போட்டான். 'மேலும் கொஞ்சம் சேர்த்து ஜவுளி தரமாட்டாயா?' என்று வேலைக்காரன் கேட்டான். ஜவுளி வியாபாரியோ மேற்கொண்டு ஒரு துண்டுகூடத் தரத் தனக்குச் சம்மதம் இல்லையென்றும் அந்த வைரத்தின் பொருட்டுத் தான் ஏற்கனவே பகர்ந்த மதிப்பே மிக அதிகமானது என்றும் கூறி மறுத்துவிட்டான். இங்ஙனம் நிகழ்ந்த வர்த்தகத்தைப்பற்றி வேலைக்காரன் தன் எஜமானனிடம் திரும்பி வந்து தெரிவித்தான். எஜமானனும் புன்னகை பூத்தவனுக அந்த வைரத்தை ஒரு ரத்தின வியாபாரியிடம் எடுத்துச் செல்லும்படி அவனை ஏவினன். வேலைக்காரனும் அங்ஙனமே செய்தான். ரத்தின வியாபாரி வைரத்தைக் கையில் வாங்கி வைத்துக்கொண்டு நோட்டம் பார்த்தான். அது மிக நல்ல வைரம் என்றும் அதில் குற்றம் ஏதும் இல்லை என்றும் அவன் தெரிவித்தான். கொண்டு வந்தவன் அதை விற்க விரும்பினல் அதற்காகத் தான் ஒரு லட்சம் ரூபாய் தருவதற்கு ஆயத்தமாயிருப்பதாக ரத்தின வியாபாரி தெரிவித்தான்.

''மானுட ஜன்மம் கிடைப்பதற்கரிய பேருக இருக்கிறது. மதிப்பில் அது வைரத்துக்கும் மிக்கது. பெறுதற்கரிய பேருகிய மானுட ஜன்மத்தை ஒவ்வொரு மனிதனும் அவனவன் படைத்துள்ள அறிவுக்கேற்றவாறு மதிப்புப் போடுகிருன். 'நான் கூலி வேலைசெய்து உயிர் வாழ்ந்திருப்பேன்' என்று பாமரன் ஒருவன் தீர்மானிக்கிருன். 'நான் குமாஸ்தா வேலை செய்து என்னுடைய வாழ்வை நன்கு கழிப்பேன்' என்கிருன் கல்வி கற்ற மற்ருெருவன். 'வர்த்தகம் பண்ணிச் செல்வம் மிகச் சம்பாதித்துச் சுகஜீவனம் பண்ணுவேன்' என்கிருன் மூன்ருவது மனிதன். 'கலைகள் பல பயின்று நான் கல்விமானுவேன்' என்கிருன் வேருெருவன். 'மேலும் ஒரு கலாசாலையில் ஆசிரியனுக அமர்ந்துகொண்டு தான் கற்றிருக்கும் கல்வியனைத்தையும் எதிர்காலத்தில் குடிமக்களாக வரும் மாணக்கர்களுக்கு உரியனவாக்குவேன்' என்று அவன் தீர்மானிக்கிருன். 'நாட்டின் நலனுக்காக என் வாழ்வை நான் பயன்படுத்துவேன்' என்கிருன் இன்னெருவன். அரிதிலும் அரிதாக யாரோ ஒரு விவேகி 'கிடைப்பதற்கரிய இந்த மானுட ஜன்மத்தைக் கடவுள் வழிபாட்டில் பயன்படுத்தி அவருடைய அருளுக்குப் பாத்திரமாவேன்' எனத் தீர்மானிக்கிருன்.

''உலகத்தவர்கள் 'நான் கடவுள் வழிபாடு செய்கிறேன்' என்கிருர்கள். அவர்கள் பண்ணும் வழிபாடுதான் என்ன? அறை ஒன்று மூடப்பட்டிருக்கிறது. கதவுகளும் ஜன்னல்களும் அடைபட்டுக் கிடக்கின்றன. கூரையில் உள்ள சிறு துவாரத்தின் வாயிலாகச் சூரிய வெளிச்சம் அறைக்குள்ளே வருகிறது. அத்தகைய கூரை தலைக்குமேல் இருக்கும்பொழுது சூரியனுடைய சொருபத்தை உள்ளபடி பார்க்க

அவ்வறையினுள் அமர்ந்திருக்கும் மனிதனுக்கு இயலுமா? அறையினுள்ளே வருகின்ற சிறிய சூரிய வெளிச்சத்தால் அவனுக்கு ஆவதுதான் என்ன? காமமும் காசு ஆசையுமே கடவுள் காட்சியை மறைக்கின்ற கூரைக்கு நிகரானவை. தலைக்குமேல் இருக்கும் கூரையை நீக்கவேண்டும் அல்லது தானே அவ்வறையினின்று வெளியே வரவேண்டும். அப்பொழுதுதான் சூரியனை உள்ளபடி தரிசிக்க அந்த மனிதனுக்கு இயலும். அறையினுள் அடைபட்டுக் கிடக்கும் மனிதனுக்கு நிகரானவர்கள் உலகத்தவர்கள்.

"அவதார மூர்த்திகளுக்கு மற்றொரு பெயர் உண்டு. அவர்கள் ஈசுவர கோடிகள் என இயம்பப் பெறுகின்றனர். உபநிஷதங்கள் அப்பெருமக்களை அதிகார புருஷர்கள் என்று பாராட்டுகின்றன. வெட்ட வெளியை மெய் என்று கருதும் பான்மை அவர்களுக்கு உரியதாகும். இக்காரணத்தைக் கொண்டும் உலக பந்தபாசங்களில் அவர்கள் கட்டுண்டு கிடப்பவர்கள் அல்லர். அவர்கள் படைத்திருக்கும் அகங்காரம் உலகத்தவர்களுடைய அகங்காரம் போன்று கடினமானதன்று. உலகத்தவர்களுடைய அகங்காரத்தை நான்கு சுவர்களுடனும் மேலே கூரையுடனும் கூடிய அறை ஒன்றோடு ஒப்பிடலாம். அத்தகைய அறையினுள் கட்டுண்டு கிடப்பவன் வெளியில் உள்ள எதையும் காணமாட்டான். இதற்கு நேர் மாறாக ஆச்சாரிய புருஷர்கள், அவதாரமூர்த்திகள், ஈசுவர கோடிகள் ஆகியோர் படைத்துள்ள அகங்காரம் மிக மெல்லியதாம். அத்தகைய அகங்காரத்தின் வாயிலாகப் பரவஸ்துவினுடைய தரிசனம் யாண்டும் அன்னவர்களுக்கு உரியதாம். அத்தகைய தரிசனத்துக்குத் தடையாக ஏதும் இடையில் வந்து நிற்பதில்லை. மானுடன் ஒருவன் சுவர் ஒன்றின் அருகில் நின்று கொண்டிருக்கிறான் என்று வைத்துக் கொள்வோம். அந்தச் சுவருக்கு இருமருங்கிலும் உள்ள கரைகாணாத வெட்ட வெளி அவனுடைய காட்சிக்கு எட்டுகிறது. அந்தச் சுவரில் துவாரம் ஒன்று இருக்குமாகில் அதன் வாயிலாக அப்புறம் இருக்கும் யாவற்றையும் காண அவனுக்கு இயலுகிறது. அந்தத் துவாரம் பெரியதாய் இருக்குமாகில் அதன் வாயிலாக அவன் சுவருக்கு அப்புறமும் இப்புறமும் போகக்கூடும். அவதாரமூர்த்திகளும் ஈசுவரகோடிகளும் படைத்துள்ள அகங்காரம் பெரிய துவாரத்துடன்கூடிய சுவருக்கு ஒப்பாகிறது. உலகத்தவர்கள் படைத்திருக்கும் அகங்காரம் அக்ஞானத்தினின்று வந்துள்ளது. மற்று, சான்றோர்கள் படைத்துள்ள அகங்காரமோ விவேகத்தின் விளைவாம். நடிகன் ஒருவன் நாடகமேடையின் மீது வந்து கண்ணில்லாக் குருடன் போன்று நடிக்கிறான். அவனுடைய நடிப்புத் திறமையும் நன்கு வெளியாகிறது. ஆனால் உண்மையில் அன்னவன் குருடனல்லன். தனக்குக் கண்தெரியும் என்பது அவனிடமிருந்து மறைந்துபட்டுப்போவதில்லை. மேடையின்மீது குருடனாக நடிக்கும் கண்ணுடையவனுடைய நடிப்புக்கு ஒத்ததாகும் அவதாரமூர்த்திகள் வாழ்ந்துவரும் பிரபஞ்ச வாழ்வு ஆகும். பிரபஞ்சம் எனப்படும் இம்மையிலே அவர்கள் வாழ்ந்து வருகிறார்கள் எனினும் பரம்பொருள் என்னும் பரத்தினுடைய காட்சியை அவர்கள் யாண்டும் கண்டு கொண்டிருக்கின்றனர். மற்ற உலகத்தவர்கள் போன்று அன்னவர்களும் பஞ்சபூதங்களால் ஆகிய உடலைத் தாங்கி இருக்கின்றனர். எனினும் அவர்கள் யாண்டும் பரம்பொருளினின்று பிரியாத பாங்குடன் இருந்து வருகின்றனர். மேலும், விரும்பிய பொழுதெல்லாம் அப்பெரிய துவாரத்தின் வாயிலாக அவர்கள் அதீத நிலையை எட்டிச் சமாதியில் திளைத்திருக்க வல்லவர்களாம். இங்ஙனம் இகம், பரம் ஆகிய இரண்டிலும் மாறி மாறி வீற்றிருக்கும் திறமை அவர்களுக்கு உண்டு. ஒரு வேளையில் அதீதத்திலுள்ள சமாதியில் அவர்கள் மூழ்கியிருக்கின்றனர். அடுத்த வேளையில் கால, தேச, நிமித்தத்தில் கட்டுண்டிருக்கும் இப்பிரபஞ்ச வாழ்விலும் சம்பந்தப்பட்டிருப்பவர்களாக அவர்கள் தென்படுகின்றனர். பிரபஞ்சவாழ்வில் கட்டுண்டிருப்பவர்களாகப் புறத்தோற்றத்துக்குத் தென்படினும், அவர்கள் உண்மையில் கட்டுண்டவர்களல்லர்."

இங்ஙனம் ஆன்றோர்கள் அடைந்திருக்கும் பாரமார்த்திகப் பெருநிலையைப் பற்றிப் பரமஹம்சதேவர் திருவாய் மலர்ந்தருளியதைப் பக்தர்கள் திகைத்துப் போனவர்களாகக் கேட்டுக் கொண்டிருந்தனர்.

---

# எந்நாள் கண்ணி

(தாயுமானவர் இயற்றியது)

**10-1. பேச்சுமூச்சு இல்லாத பேரின்ப வெள்ளம் உற்று
நீச்சுநிலை காணாமல் நிற்குநாள் எந்நாளோ.**

நீச்சுநிலை – ஆழந்தெரியாத அகண்டாகார நிலை.

பிராணனும் மனதும் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டவைகள். மூச்சுவிட்டுக்கொண்டிருப்பது பிராணனுடைய நிலை. பேச்சும் எண்ணமும் மனதினுடைய செயல். இவையிரண்டும் ஒன்றோடொன்று நெருங்கி இணைந்துள்ளன. மனது செயல்படுகின்றவிடத்துப் பிராணனும் செயல்படுகிறது. மனது ஒழுங்காகச் செயல்படுமிடத்துப் பிராணனும் முறையாகச் செயல்படுகிறது. மனச்செயலில் தடுமாற்றம் உண்டாகின்றபொழுது மூச்சும் திணறுகிறது. இங்ஙனம் இவை இரண்டும் சம்பந்தப்பட்டிருக்கின்றன. ஆதலால் பிராணாயாமத்தின் மூலமாகச் சுவாசிக்கும் போக்குவரத்தை ஒழுங்குபடுத்தினால் மனது அமைதியடைகிறது. விவேகத்தின் வாயிலாக மனது உபரதி பெறுகின்றபொழுது பிராணனும் ஒழுங்குப்பாடு அடைகிறது. மனது சங்கற்ப விகற்பவாயிலாகச் செயல்படுகிறது. ஆசையினால் தூண்டப்பட்டு மனது செயல்புரிகின்றபொழுது அது சங்கல்பம். சங்கல்பம் நாளடைவில் விகல்பமாக வடிவெடுக்கிறது. அதாவது ஆசை இல்லாதவிடத்தில் உண்டாகின்ற சித்தவிருத்திக்கு விகற்பம் என்று பெயர். ஞானோதயத்தில் இந்த விகல்பம் ஒடுங்குகிறது. அது நிர்விகல்பம் எனப் பகரப்படுகிறது. மனம் ஓய்ந்து போய் நிர்விகல்பமாகின்றவிடத்து அது நிர்விகல்ப சமாதி என இயம்பப் பெறுகிறது. இதுவே ஆத்மசாதகன் அடைகின்ற பாரமார்த்திகப் பெருநிலையாம். அந்நிலையை ஆத்மசாதகன் அடையுங்கால் சுவாசமும் தானாக ஒடுங்கிப் போகிறது. புறத்தோற்றத்தில் இது சாவுக்கு நிகரானது. ஏனென்றால் செத்த பிணத்தில் சுவாசித்தலை நாம் காண்பதில்லை. இதயத் துடிப்பும் நின்றுபோகிறது. நிர்விகல்ப சமாதியிலும் இதயத்தின் செயல் நின்று போய்விடுகிறது. ஆதலால் புறத்தோற்றத்தில் நிர்விகல்பசமாதியும் சாவும் ஒன்றுபோன்று தென்படுகின்றன. ஆனால் ஒன்றனிடத்து உள்ளொளி ஓங்கி நிற்கின்றது. மற்றதில் உள்ளொளி அடங்கிப் போகிறது. இந்நிலையில் ஆத்மசாதகன் அடைந்துள்ள பேரானந்தப் பெருநிலை அகண்டாகாரமானது. ஆகையினால் அதை யாரும் ஆழம் பார்க்க முடியாது. ஆழம் பார்க்க முடியாமையினால் இதை நீச்சுநிலை காணாதநிலை எனத் தாயுமானவர் இயம்புகின்றார். இந்நிலையை அடையப்பெற்ற ஜீவாத்மன் பரத்தில் ஒன்றுபடுகிறான். இதுவே இக்கண்ணியின் உட்கருத்தாம்.

**10-2 சித்தம் தெளிந்தோர் தெளிவில் தெளிவுஆன
சுத்த சுகக்கடலுள் தோயுநாள் எந்நாளோ.**

சித்தம்—செயல் புரிந்துகொண்டிருக்கிற மனது.

சுகக்கடல்—பிரம்மானந்தம் என்னும் அகண்டாகார நிலை.

சித்தம் தெளிதல் ஆத்மசாதனத்தின் குறிக்கோளாகிறது. தெளிதல் என்பதற்குச் சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். மனோதத்துவத்தை விளக்குதற்குக் கைலாயங்கிரிக்குத் தென்புறத்தில் அக்கைலயங்கிரியினின்று நாற்பது மைல் தூரத்தில் மானச சரோவரம் என்னும் தடாகம் ஒன்றிருக்கிறது. மனோதத்துவத்துக்கு அது பொருத்தமான புறச்சின்னமாகிறது. காலை நேரத்தில் காற்றடிக்காத வேளையில் அத்தடாகமானது அலை வீசாமல் ஓய்ந்திருக்கிறது. வரைந்த படம் போன்று அது தென்படுகின்றது. அந்தத் தடாகத்தினுள் இருப்பது தெளிந்த நீர். ஐம்பது அல்லது அறுபது அடிக்குக் கீழே உள்ள வெள்ளை நிறமான மணல் கண்ணுக்குத் தென்படுகிறது. இதற்கு மாறாகச் சேறு படிந்த நீரில் ஓர் அங்குலத்திற்குக் கீழே உள்ள தரை தென்படாது. இத்தடாகத்தின்கண் உள்ள தண்ணீருக்கு நிகராக மனதில் படிந்துள்ள ஆசாபாசங்களை அகற்றுதல் ஆத்ம சாதனமாம். பிறகு அந்நீரானது அசைவற்றிருக்கின்றபொழுது கைலாயங்கிரியின் பிம்பம் தெளிவுற அத்தடாகத்தினுள் பிரதிபிம்பிக்கிறது. ஆத்ம சாதகனுடைய மனது அத்தகைய தெளிந்த நிலையையும் அசை

யாத நிலையையும் அடையப்பெறுமிடத்து அந்த மனதுக்கு ஆதாரமாய் இருக்கின்ற பிரக்ஞானம் அல்லது ஆத்மசொரூபம் உள்ளபடி தெரிகிறது.

ஒருவிதத்தில் உயிர்களனைத்தும் சுஷுப்தி அவஸ்தையில் சுகக் கடலில் தோய்ந்திருக்கின்றன. ஆனால் சுஷுப்தி அவஸ்தை அல்லது கனவற்ற உறக்கத்தினுடைய பாங்கு வேறு, சமாதி நிலையின் பாங்கு வேறு. சமாதிநிலையில் ஆனந்தம் தெளிவுற்றுவிரிவடைந்துமிளிர்கிறது. சுஷுப்தி அவஸ்தையில் அக்ஞான இருளில் அது மறைந்திருக்கின்றது. மறைந்து அது இருந்தாலும் ஜீவர்கள் சுஷுப்தி அவஸ்தையில் அடைகின்ற ஆனந்தம் ஒப்பற்றது. சுஷுப்தியில் ஆனந்தத்தில் இருக்கின்ற ஜீவன் விழித்துக்கொண்டவுடனே மீண்டும் உலக வியவகாரங்களுக்கு ஆளாகின்றான். சுஷுப்தி அவஸ்தையில் அனுபவித்த பேரானந்தம் தடைப்படுகிறது. மற்று, சுஷுப்திக்கு நிகரான சமாதிநிலையை அடையுங்கால் மீண்டும் வியவகார நிலைக்குத் திரும்பி வருகின்றபொழுது அதில் அமைந்துள்ள துன்பங்கள் அவனைத் தொடமாட்டா. ஆதலால் அவன் 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' என்னும் இலக்குக்கு இலக்காகின்றான் என்பது இக்கண்ணியின் கோட்பாடு.

**10-3. சிற்றின்பம் உண்டு ஊழ் சிதைய அனந்தம் கடல் போல்**
**முற்றின்ப வெள்ளம் எமை மூடுநாள் எந்நாளோ.**

சூரியன் யாண்டும் வெப்ப மயமாகவும் வெளிச்ச மயமாகவும் இருந்து வருகிறது. அதனுடைய வெப்பத்தையோ வெளிச்சத்தையோ குறைக்கவும் தடுக்கவும் யாருக்கும் இயலாது. ஆனால் ஒரு சிறிய மேகம் வந்து இடையில் நின்று அதனுடைய வெளிச்சத்தையும் வெப்பத்தையும் தடுப்பது போன்று நமக்குத் தென்படுகிறது. அப்படி நமக்குத் தென்படுவது சூரியனுடைய நிஜ நிலையன்று. நம் அறியாமையினால் வெப்பமும் வெளிச்சமும் தணிந்துபோனது போன்று நாம் வியாக்கியானம் பண்ணுகின்றோம். அந்தச் சூரியனுக்கு நிகராக ஆத்மா எப்பொழுதுமே ஆனந்த சொரூபி. இந்த ஆனந்தத்துக்குச் சித்தவிருத்தி என்ற இடையூறு வருகின்றபொழுது அது சிதறடைந்த ஆனந்தமாகத் தென்படுகிறது. எனவே, அனந்தங்கோடி ஜீவர்கள் விருத்திக்கேற்றவாறு சிறிய சிறிய இன்பங்களை அனுபவித்து வருகின்றனர். அத்தகைய சிற்றின்பங்களைப் பேரின்பமாக மாற்றுதற்கே அத்தனை உயிர்களும் முயன்று வருகின்றன. ஆனால் சித்தவிருத்தி இருக்கும் பரியந்தம் பேரானந்தம் சாத்தியப்படாது. அத்தகைய பேரானந்தம் மனிதனுக்குச் சிற்றின்பமாகச் சிதறடைந்திருப்பதற்குக் காரணம் மனிதனிடமுள்ள அக்ஞானமாம். ஜீவாத்மன் கர்மத்தில் கட்டுண்டு கிடப்பது மேகத்தால் மூடப்பெறுகிற சூரியனுடைய நிலைக்கு ஒப்பானது. மனிதனுடைய நிஜ சொருபமாகிய ஆனந்தத்துக்குத் தடைபோடுவது மனிதன் படைத்துள்ள வினைப்பயனும். நல்வினையின் விளைவாக மனிதன் அடைகின்ற ஆனந்தம் சிற்றின்பம். தீவினையின் விளைவாக அது மறைந்திருப்பது துன்பத்துக்கு நிகர். ஆகவே, எங்கெல்லாம் இன்பம் துன்பமாகத் தென்படுகின்றதோ ஆங்கெல்லாம் வினையின் ஆதிக்கம் விளையாடுகிறது. வினைக்கு மனிதன் அடிமைப்பட்டிருக்கலாகாது. வினையை வெல்லுவது வாழ்க்கையின் குறிக்கோள். தீவினையை அகற்றுதற்கு மனிதன் நல்வினையில் ஈடுபடுதல் வேண்டும். பிறகு அந்த நல்வினையையும் கடந்து அப்பால் செல்கின்றவிடத்துத் தன்னுடைய நிஜ சொருபமாகிய பேரானந்தம் அவனுக்குச் சொந்தமாகிறது.

கர்மயோகி கர்மத்தைக் கையாளுதற்கிடையிலே அதற்கு அவன் அடிமைப்பட்டவன் அல்லன். கர்மயோகிக்குக் கர்மபலனில் பற்றில்லை. எனவே அவன் கர்மத்துக்குக் கட்டுப்படாதவனாக இருக்கின்றான். கர்மம் செய்வதற்கிடையில் அவன் சாந்தியுடையவனாக இருக்கின்றான். யோகியின் ஆணைக்கு உட்பட்டுக் கர்மம் நிகழ்கிறது. அதற்கிடையில் அவன் பேரானந்தத்தில் யாண்டும் திளைத்திருக்கிறான். எனவே சரீரம் இருக்கும் வரையில் யோகி ஆனந்தத்தையும் அனுபவிக்கிறான்; வினையையும் ஆண்டு வருகின்றான். யாக்கை அழியுமிடத்துக் கர்மம் அதோடு முற்றுப்பெறுகிறது. நிஜசொருபமாகிய ஆனந்தத்தில் அவன் மூழ்கியிருக்கிறான். இதுவே இக்கண்ணியின் கருத்தாம்.

# நமக்கு வேண்டியது பலம்

( சுவாமி விவேகானந்தர் )

அழிப்பது சுலபம்; ஆக்குவது கடினம். அழிக்கும் வேலையில் இறங்காதீர்கள். இருப்பதை அழிக்காதீர்கள். எதையும் கீழ்நிலைக்கு இறக்காதீர்கள். ஆக்கத்துறையில் ஈடுபடுங்கள். முடிந்தால் உதவிசெய்யுங்கள். முடியாவிட்டால் கையைக் கட்டிக்கொண்டு ஒதுங்கி இருந்து நிகழ்வதைப் பார்த்துக்கொண்டிருங்கள். உதவி செய்ய முடியாவிட்டாலும் ஊறு செய்ய விழையாதிருங்கள். ஒவ்வொருவரையும் அவரவர் இருக்கின்ற நிலையிலிருந்து மேல் நிலைக்குப் போக உதவுங்கள். நீங்களும் நானும் என்ன செய்துவிடமுடியும்? ஒரு குழந்தைக்காவது நீங்கள் போதனை செய்துவிட முடியுமா? நீங்கள் யாருக்கும் போதனை செய்துவிடமுடியாது. ஒவ்வொருவரும் தங்களுக்குத் தாங்களே கற்றுக்கொள்கின்றனர்கள். அவர்கள் கற்றுக்கொள்வதற்கு வேண்டிய சூழ்நிலையை அமைத்துக்கொடுப்பதும், அவர்களுக்குத் தடையாயிருப்பனவற்றை நீக்குவதுமே நீங்கள் செய்யக்கூடிய உதவியாகும்.

எனக்கு வாழ்க்கையில் உள்ள முழு விருப்பம் ஒவ்வொருவருக்கும் உன்னத கருத்துக்களை எடுத்துச் சொல்லும் இயக்கம் ஒன்றை இயக்கி விடுவதே ஆகும். மக்களுக்கு வழிகாட்டித் தந்துவிட்டால் அவர்கள் விதியை அவர்களே நிர்ணயித்துக்கொள்வார்கள்.

சிந்திப்பதற்கும் செயல்படுவதற்கும் சுதந்திரம் அளிக்கவேண்டும். அப்பொழுதுதான் வளர்ச்சியைக் காணமுடியும். எண்ணுதற்கோ செயல்படுவதற்கோ சுதந்திரம் இல்லாவிட்டால் நாடு கீழ்மை அடையும். சிந்தனைக்கும், செயலுக்கும் சுதந்திரம் அளிப்பதுபோன்று உணவிலும், உடையிலும், விவாகத்திலும் மனிதனுக்குச் சுதந்திரம் இருக்கவேண்டும். ஆனல் அச் சுதந்திரம் யாருக்கும் துன்பம் அளிக்காத முறையில் செயல்பட்டு வரவேண்டும்.

பலம் ஒன்றே நமக்குத் தேவையென்பதை நான் உங்களுக்குச் சொல்கின்றேன். கோழைத் தனத்தை எண்ணிக்கொண்டிருப்பதன்மூலம் அதிலிருந்து விடுபடமுடியாது. பலத்தை எண்ணுவதன்மூலமே பலவீனத்தைப் போக்க முடியும். இரும்புத் தசையும், எஃகு நரம்பும் இன்றைக்கு நமக்குத் தேவை. அசைக்க முடியாத மனவலிமை தேவை. பிரபஞ்ச உண்மைகளையெல்லாம் ஊடுருவி அறிந்து கொள்ளக்கூடிய புத்திக்கூர்மை வேண்டும். கடலுக்கடியில் சென்றாவது, மரணத்தோடு போராடியாவது காரியத்தை முடிக்கும் செயல் திறமை வேண்டும். நாம் வலிமை உடையவர்கள் ஆவதற்கு உபநிஷதங்களைப் போற்றுவதும், நாம் ஆத்ம சொரூபம் என்று நம்புவதுமே முதற்படியாகும். உலகம் முழுவதற்கும் புத்துயிர் ஊட்டக்கூடிய சக்தி உபநிஷதங்களில் இருக்கிறது. பல நூற்றாண்டுகளாகத் தங்களைச் சிறுமைக்குள்ளாக்கக்கூடிய செய்திகளையே மக்கள் கேட்டு வந்திருக்கிறார்கள். இனி ஆத்மனைப்பற்றி அவர்கள் கேட்கட்டும். கீழ் மகன் என்று சொல்லக்கூடியவனிடத்தும் ஆத்மா குடிகொண்டிருக்கிறது. ஆத்மாவுக்கு ஆதியுமில்லை; அந்தமுமில்லை.

தீமையும், அறியாமையும் எப்பொழுதாவது மக்களுக்கிடையில் காணப்படுமானல், அதற்கு வேற்றுமைதான் காரணம் என்பதை நான் அனுபவத்தில் கண்டிருக்கின்றேன். ஒற்றுமையிலும், சமத்துவத்திலுமிருந்துதான் நன்மை உருவெடுக்க முடியும். வேதத்தினுடைய சிறந்த போதனையும் இதுவேதான். ஆரண்யத்திலும், குகையிலும் வேதாந்தம் பேசப்பட்டால் போதாது. நாட்டிலுள்ள ஏழை மக்களிடத்திலும், தொழிலாளிகளிடத்திலும், மாணக்கரிடத்திலும் வேதாந்தம் செயல்பட வேண்டும். ஆண்களையும், பெண்களையும், குழந்தைகளையும், தொழிலாளிகளையும் வேதாந்தம் அறைகூவி அழைக்கவேண்டும். அவர்கள் வேதாந்தத்தை உணர்ந்து அதன்படி வாழ்வார்களானல் இந்தியாவுக்கு விமோசனம் தானே வந்துவிடும். வேதாந்தத்தைக் கடைப்பிடிக்கின்ற தொழிலாளி சிறந்த தொழிலாளியாகவும், வேதாந்தத்தைக் கடைப்பிடிக்கின்ற மாணக்கன் சிறந்த மாணக்கனகவும் திகழ்வார்கள். வேதாந்தத்தைக் கடைப்பிடிக்கின்றவர்கள் சிறந்தவர்களாக விளங்குவார்கள்.

# ஞானமார்க்கம்

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1983 இல் திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம் அந்தர் யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

நம் வாழ்வில் சொப்பனமும் இடம்பெறுகின்றது. ஜாக்கிரதாவஸ்தையில் பெற்ற அனுபவத்தைச் சொப்பனத்தில் நமக்கு நாமே தோற்றுவித்துக் கொள்கிறோம். விழித்துக் கொண்ட பிறகு அதைச் சொப்பனம் என்று ஒதுக்கித் தள்ளுகிறோம். ஜாக்கிரதாவஸ்தையும் சொப்பனமே. சீன தேசத்தில் விவேகி ஒருவர் இருந்தார். அவர் கண்ட கனவு அவரைச் சான்றோராக்கியது. ஒருசமயம் கனவில் தாம் ஒரு பட்டுப்பூச்சியாக இருப்பதைக் கண்டார். தம்முடைய அழகைத் தாமே ரசித்துக்கொண்டிருந்தார். கனவு கலைந்து எழுந்த பிறகு தம்மைத் தாமே கேட்டுக்கொண்டார்: "பட்டுப்பூச்சியாக இருந்து இப்பொழுது மனிதனாக மாறி இருக்கின்றேனா, அல்லது மனிதனாக இருந்துகொண்டு இப்பொழுது பட்டுப்பூச்சியாக ஆகி விட்டதாகக் கனவு கண்டேனா?" என்று கனவுக்கும், நனவுக்கும் வித்தியாசமில்லாத மனநிலை தமக்கு இருப்பதைக் கூறினார். அந்த மனநிலை அவரைப் பெரிய ஞானியாக ஆக்கியது.

கனவையும் நனவையும் சீர்தூக்கி ஆராய்ந்து பார்த்தல் ஆத்ம சாதனமாகும். கனவுக்கு நிகராக நனவை என்றைக்கு நினைக்கின்றோமோ அன்றைக்கு நாம் நல்ல விவேகம் படைத்தவர்கள் ஆகின்றோம். உண்மையில் நனவில் நடப்பதும் கனவுபோல் ஆய்விடுகின்றது. பத்து ஆண்டுகளுக்கு முன்பு நனவில் விருந்து ஒன்று சாப்பிட்டோம் என்று வைத்துக்கொள்வோம். பத்து ஆண்டுகளுக்கு முன்பு கனவிலும் அது போல் ஒரு விருந்து சாப்பிட்டதாக வைத்துக்கொள்வோம். இன்றைக்கு அவ்விரண்டும் கனவுதான். ஒரு நிலையில் இருப்பது மற்றொரு நிலையில் மாறிப்போகிற பொழுது அது நித்தியமானது அன்று. நனவில் இருப்பவைகள் எல்லாம் கனவில் இல்லாமல் போய்விடுகின்றன. சொப்பனத்தில் தென்படுகிறவைகள் நனவுக்கு வரும்பொழுது இல்லாமற் போய்விடுகின்றன. எனவே நனவிலும், கனவிலும் நாம் பார்ப்பவைகள் அநித்தியமானவைகள். அவற்றை நாம் நித்தியமாய்க்கொள்வது நம்முடைய அறிவீனமாகும். நனவில் நாம் பெற்றுள்ள சொத்து சுகமனைத்தும் அநித்தியமானவைகளே என்பதை அறிந்துகொள்கின்ற அளவு நாம் விவேகம் படைத்தவர்கள் ஆகின்றோம். அயர்ந்து உறங்குகின்றபொழுது நமக்குத் தெரியாமல் நாம் தியாகம் செய்கின்றோம். தியாகம் செய்வதில் சிரமம் எதுவும் இல்லை.

**"யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்**
**அதனின் அதனின் இலன்"**

என்ற குறள் தியாகத்தை விளக்குகிறது. ஒருவன் நனவில் பணம் ஏராளமாகச் சம்பாதித்து வங்கியில் போட்டு வைத்துள்ளான் என்று வைத்துக்கொள்வோம். எவ்வளவு பணம் இருக்கிறது என்று கணக்குப் பார்த்து மகிழ்ச்சி அடைகின்றான். அப்பொழுது அவனால் தூக்கத்தை விட்டு விலகி இருக்க முடியாது. ஆழ்ந்து தூங்கும்பொழுது நனவில் கணக்குப் பார்த்து அடைந்த மகிழ்ச்சியைத் தியாகம் செய்தவனாகின்றான். அவ்விதம் தியாகம் செய்யாது சதா அப்பணத்தைப் பற்றிய ஞாபகத்தை வைத்திருப்பானானால் அவனுக்குப் பைத்தியம் பிடித்துவிடும். ஆழ்ந்த உறக்கத்தில் இன்பம் இருப்பதால் உயிர்கள் யாவும் நனவிலிருந்து ஆழ்ந்த உறக்கத்துக்குச் செல்ல விரும்புகின்றன. அது தியாகம் செய்வதில் உயிர்களுக்கு விருப்பம் உண்டு என்பதைக் காட்டுகிறது.

தியாகத்தின் மூலமாகவே அழிவில்லாத அமிர்தநிலை அடையப்படுகிறது என்று உபநிஷதம் கூறுகிறது. அதுதான் நம்முடைய நிஜ சொரூபம் ஆகும். நிஜசொரூபம் ஆனந்தமயமாக இருக்கிறது. நனவில் உள்ளவைகளெல்லாம் மறையும்பொழுது சுஷுப்தியில் நம்முடைய நிஜசொரூபம் மட்டும் எஞ்சியுள்ளது. ஆகையால் ஆழ்ந்த உறக்கத்தில் ஆனந்தத்தை அனுபவிக்கின்றோம். உறக்கத்தில் நம்மிடத்திலுள்ள ஆனந்தத்தை அனுபவிப்பதுதான் நிஜநிலை என்றால், நனவில் புற உலகில் நாம் தேடி அலைந்ததெல்லாம் பொரு

ளற்றது. கஸ்தூரிமான் ஒன்று தன்னிடத்திலிருந்து தோன்றி வரும் மணத்தைக் காடெங்கும் தேடித் திரிகின்றது. அதற்கு நிகராக நாம் நம்மிடம் உள்ள ஆனந்தத்தை அறிந்து கொள்ளாது புற உலகில் அதைத் தேடித் திரிகின்றோம். இது நம்முடைய அறியாமை. நம்மிடம் உள்ள ஆனந்தத்தை யாரும் அபகரித்துக்கொள்ள முடியாது. எக்காரணத்தை முன்னிட்டும் அது அழிந்துபட்டுப் போவதில்லை. விவேகத்தைக்கொண்டு ஆராய்ந்து நாம் இவ்வுண்மையை அறிந்துகொள்ள வேண்டும். கனவில் நல்லது நடந்தால் இது கனவாய்ப் போயிற்றே என்று ஏங்குவது மனித இயல்பு. நனவில் இது நடக்கவில்லையே என்ற எண்ணம் தோன்றுகிறது. ஆனால் உண்மையில் நாம் நனவில் பெறுகின்றவைகளும் பயனற்றவைகள்தாம் என்பதை அறிந்து அவற்றை ஒதுக்கித்தள்ளுமளவுக்கு நமக்குத் துன்பங்கள் குறையும். சரீரத்தின்மீது உள்ள பற்றும் நீக்கப்படவேண்டும். சரீரம் இன்றைக்கு இருந்து நாளைக்கு அழிந்துபோகும். அதன் மீது பற்றுவைத்தால் அது துக்கத்தைத் தரும். சரீரப்பற்றை நீக்கிவிட்டால் சரீரம் அழிந்து போவதைக் குறித்துக் கவலையில்லை.

நனவில் பெற்ற சம்பத்துக்கள் அனைத்தையும் சாட்சிமயமாக இருந்து பார்க்கக் கற்றுக்கொள். பொருளுக்கு உரியவன் என்பதை மறந்துவிடு. அதுவே தியாகத்தின் முதல்படி. தியாகம் செய்யும் பக்குவம் நீ அடைந்து வருகின்றபொழுது ஒருநிலையில் அயர்ந்த உறக்கமும், விழிப்பு நிலையும் ஒன்றாகத்தென்படுவதைக் காண்பாய். அந்நிலைக்குத்தான் 'தூங்காத தூக்கம்' என்று பெயர். அதை யோக நித்திரை என்றும் கூறலாம்.

"ஆங்காரம் உள்ளடக்கி ஐம்புலனைச் சுட்டறுத்துத்
தூங்காமல் தூங்கிச் சுகம்பெறுவது எக்காலம்."

தூங்காத தூக்கத்தில் தன்னைத் தவிர வேறொன்றும் இல்லை. விழிப்பு நிலையில் தன்னைத் தவிர ஏனைய யாவையும் துடைத்துத் தள்ளிவிடுகின்றான். ஆத்மாவிலேயே அவன் ஆத்ம திருப்தனாக இருக்கின்றான். அங்குதான் நனவு நிலையும், கனவு நிலையும் சந்திக்கின்றன. நனவு, கனவு, ஆழ்ந்த உறக்கம் ஆகிய மூன்று நிலைகளுக்கும் பொதுவாக இருப்பது ஆத்மாவாகும். அநித்தியமாகிய மூன்று அவஸ்தைகளுக்கும் பொதுவாயிருப்பது நித்தியப் பொருளாகிறது. துரியம் என்ற நிலையில் ஆத்மா ஒன்றுதான் உள்ளது.

திரைப்படக் காட்சியில் படங்கள் மாறிமாறி வருகின்றன. திரைமட்டும் மாறுவதில்லை. திரைப்படத்தில் திரை மாறாதிருப்பதுபோன்று நனவுநிலை, கனவுநிலை, உறக்கநிலை ஆகிய மூன்று நிலைகளுக்கும் மாறாது இருப்பது ஆத்ம சொரூபம். அதுதான் நம்முடைய நிஜசொரூபம். ஆத்ம சொரூபத்தை அடிப்படையாக வைத்துக்கொண்டு மூன்று நிலைகளும் மாறி மாறி வருகின்றன. கயிலாயகிரியின் தென்புறத்தில் மானசரோவரம் என்ற தடாகம் உள்ளது. அந்தத் தடாகத்தை அறிந்துகொண்டால் மனதை அறிந்துகொள்ளலாம். மனதை அறிந்துகொண்ட பின், நிஜ சொரூபத்தை அறிவதும் அவனுக்குச் சாத்தியம். கயிலாயகிரியின் தென்புறத்தே ஐம்பத்தாறு மைல் சுற்றளவுள்ள தடாகம் இருக்கின்றது. காலை நேரத்தில் ஆங்குக் காற்று வீசுவதில்லை. அமைதியான அந்தச் சூழ்நிலையில் கயிலையின் பிம்பம் தலைகீழாக அத்தடாகத்தில் தெரியும். அத்தடாகத்தின் ஆழ்பகுதியில் வெள்ளை வெளேரென்று மணல் இருப்பது தெரியும். ஒரு கல்லை அந்தத் தடாகத்தில் போட்டால், அக்கல் கீழே சென்று மணலை அடைவதும் தெளிவாகத் தெரிகிறது. பனிக்கட்டி உருகி அத்தடாகத்துக்கு நீர் வந்து சேர்வதால், அத்தடாகத்து நீர் தெளிந்த நீராக இருக்கிறது. காலை ஒன்பது மணிக்குப் பின் காற்று வீசுகின்றது. காற்று வீசத்தொடங்கியதும் தடாகத்தில் அலைவீசுகின்றது. அப்பொழுது அத்தடாகத்தில் கயிலையின் பிம்பமும் தெரிவதில்லை; அத்தடாகத்தின் கீழ்ப்பகுதியிலுள்ள மணலும் தெரிவதில்லை. நம் மனதில் ஆசை என்னும் காற்று அடிக்கும்பொழுது அதிலிருந்து எண்ணங்கள் என்னும் அலைகள் உண்டாகின்றன. மனதில் அப்பொழுது ஆத்ம சொரூபம் தெரிவதில்லை.

"எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி எண்ணி ஏழை நெஞ்சம்
புண்ணாகச் செய்ததினிப் போதும் பராபரமே."

ஓர் எண்ணம் எண்ணுகின்றபொழுது அவ்

வெண்ணம் ஆத்ம சொரூபத்தை மறைக்கின்றது. அதைத் தொடர்ந்து எழுகின்ற எண்ணங்களெல்லாம் ஆத்ம சொரூபத்தை மறைத்துக் கொண்டிருக்கின்றன. அதிகாலை நேரத்தில் காற்று வீசாத பகுதியில் அமைதியுற்றிருக்கின்ற மானசரோவரத்திற்கு நிகராக மனம் இருக்கிறது. அலைவீசாத பொழுது மானசரோவரத்தில் கயிலையின் காட்சியும், அடிமணலும் தெரிவது போன்று, சுத்த மனதில் ஆத்ம சொரூபம் விளங்குகின்றது.

தூங்காத தூக்கம் என்று சொல்லுவது மனிதன் தூங்கும் பொழுது அனுபவிக்கும் இன்பத்துக்கு நிகராகும். விழிப்பு நிலையில் ஆனந்தத்தை உணர்ந்து அனுபவிக்கின்ற நிலை இருக்கின்றது. அப்பொழுது அவனுடைய உள்ளத்தில் எண்ணம் எதுவும் எழுவதில்லை. அந்நிலை ஆசையை ஒதுக்குமிடத்துத்தான் ஏற்படுகின்றது. ஆசைதான் தொல்லை கொடுத்துக்கொண்டிருக்கிறது. ஆசைக்குப் பிறப்பிடம் அஞ்ஞானம். ஆசையோடு கூடிய எண்ணத்துக்குக் காமம் என்று பெயர். உலகப்பொருள்களிடத்துள்ள காமத்தை ஒதுக்கித் தள்ளிவிடு. அலையற்ற நீர் போன்று உன் மனது அமைதியாக இருக்கட்டும். அப்பொழுது நீ அதனிடத்தில் ஆத்ம சொரூபத்தைக் காண்பாய். "தன்னை அறிந்தால் தலைவன் மீது பற்றலது பின்னை ஒரு பற்றும் உண்டோ, பேசாய் பராபரமே" என்பது தாயுமானவர் வாக்கு. தான் ஆத்ம சொரூபம் என்று அறிகின்ற பொழுது தனக்கும், தலைவனுக்குமிடையே இணக்கம் ஏற்படுகின்றது. அப்பொழுதுதான் உண்மையான பக்தியும் ஞானமும் உண்டாகின்றன. உலக ஆசையை ஒதுக்கித் தள்ளி விட்டு நிராசையில் நின்று பழகுதல் வேண்டும். நிராசைதான் தெய்வம் என்பதை "நிராசையின்றேல் தெய்வம் உண்டோ?" என்று தாயுமானுர் கூறுகின்ருர். ஆசை அடியோடு நீங்கி விட்டால் நாம் தெய்வ சொரூபமாக மாறி அமைகின்ருேம். நம்முடைய நிஜசொரூபத்தை நம்மிடத்து உள்ள ஆசை மறைத்து வைத்துக் கொண்டிருக்கிறது. நாம் கொண்டுள்ள ஆசை பொருளற்ற ஆசை. அவ்வாசை நீங்க நீங்க நாம் ஆத்ம பரிபாகம் அடைந்து வருகின்ருேம். நிஜசொரூபத்தை அறிந்து கொள்ளுவதற்கு ஆசையற்ற மனது உதவுகின்றது.

மூன்று அவஸ்தைகளுக்கும் பொதுவாக இருப்பது ஆத்ம சொரூபம். திரைப்படக் காட்சியில் படங்கள் மாறி அமைவதற்கு ஆதாரமாகத் திரை மாருதிருப்பது போன்று ஜீவனிடத்தில் மாறுகின்ற அனைத்துக்கும் மாருத ஆத்ம சொரூபம் ஆதாரமாக இருந்து வருகிறது. ஜாக்கிரதம், சொப்பனம், சுஷுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகளையும் விளக்கிக் கொண்டிருப்பது ஆத்ம சொரூபமாகும். அறிவைத் தேடி அலைகின்ற நாம் அறிவுமயமாக இருக்கின்ருேம். ஆனந்தத்தைத் தேடி அலைகின்ற நாமே ஆனந்த மயமாக இருக்கின்ருேம். விஷயாதி இன்பங்கள் நிலையற்றவை. அவற்றிற்காக உலகில் அலைந்து திரிகின்ருேம். நாம் உண்மையில் அழியாப் பொருள் என்பதை மறந்திருக்கின்ருேம். சத் சித் ஆனந்தமயமாக இருக்கின்ற நாம் நம்மைப் பிரபஞ்சத்தோடு இணைத்துக்கொண்டு அல்லலுக்கு ஆளாகி வருகின்ருேம். இப்பிரபஞ்சப் பொருட்கள் மாறியமையும் தன்மை உடையவை. பிரபஞ்சப் பொருள் மறைகின்றபொழுது அம்மறைவைக் குறித்து நாம் துயரத்துக்கு ஆளாகின்ருேம். நமக்கு வருகிற துன்பங்களுக்கு நம்முடைய அஞ்ஞானமே காரணமாகும்.

'துக்க நிவர்த்தி சுகப் பிராப்தி' என்பது வேதாந்த வாக்கு. நமக்கு நல்ல விவேகம் வரும் பொழுது தெய்வத்தின் விசுவரூபத்தை அறிகின்ருேம். அதனுடைய விசுவரூபத்தை அறிய அறிய துக்கத்துக்கோ, ஆசைக்கோ இடமில்லை. ஆசையும், துக்கமும் போய்விட்டால், சொரூபம்தான் எஞ்சி இருக்கின்றது. மக்களாகிய நாமும் மற்ற உயிர்களும் இறைவனிடமிருந்து வந்தவர்களாகின்ருேம். பரம்பொருள் சச்சித் ஆனந்த சொரூபமாக இருக்கின்ருர். நாம் அவரிடமிருந்து வந்தவர்களாகையால் நாமும் சச்சிதானந்த சொரூபம். அப்பெருநிலையை நம்மிடமுள்ள அஞ்ஞானம் நமக்கு மறைத்து வைத்திருக்கிறது. அஞ்ஞானத்தின் விளைவாக நம்மைப் பிரபஞ்சத்தோடு இணைத்து வைத்துக்கொண்டு மெய்ப்பொருளை மறந்து பிரபஞ்சத்தில் உழன்று கொண்டிருக்கின்ருேம். பிரபஞ்சத்தை ஒதுக்குதல் வேண்டும்.

ஜாக்கிரதாவஸ்தையிலுள்ள பொருட்களையெல்லாம் நன்றாக விசாரித்துப் பார்க்கவேண்டும். சொப்பனாவஸ்தையையும் விசாரித்துப்பார்த்து அது பொருளற்றதென்று ஒதுக்கவேண்டும். சுஷுப்தியில் தெளிவுபெற வேண்டும். சாதனையின் மூலம் நம்மைப் பக்குவப்படுத்தி வர வர நம்முடைய நிஜநிலை நமக்கே விளங்கும்.

நம்முடைய நிஜசொருபத்தை ஒருநாளும் பிரபஞ்சத்தில் பெற முடியாது. சுஷுப்தியில் நம்முடைய நிஜசொருபத்தில் இருக்கின்றோம். ஆனால் அப்பொழுது அக்ஞான இருள் நம்முடைய நிஜ சொருபத்தை மறைத்துக்கொண்டிருக்கிறது. அக்ஞான இருள் நீங்க நீங்கத் தான் அழியாத ஆத்மசொருபம் நமக்கு விளங்கும். கனவில் நாம் இறந்து போனதாகக் கனவு கண்டால் நாம் இறந்தவர்கள் அல்லர். அதே போன்று நனவில் மரணம் வந்தாலும் நாம் இறந்தவர்கள் அல்லர். நம்மை நாம் செத்துப் போவதாக எண்ணிக்கொள்வதற்கு இடையில் நாம் சாவதில்லை. சாகாத நாம் சாகப்போவதாக எண்ணிக்கொண்டிருக்கின்றோம். துக்கமில்லாத நாம் துக்கப்படுவதாக எண்ணிக் கொண்டிருக்கின்றோம். இப்படி நாம் நம்மைக் கற்பனை பண்ணிக் கொண்டிருப்பது அக்ஞானத்தின் விளைவாகும். இந்த நிலையைப்போக்கி விசுவரூபத்தில் நம்மை ஐக்கியப்படுத்தி அதில் உறுதி பெற்றிருப்பது தான் ஞானமாகும்.

प्रजहाति यदाकामान् सर्वान् पार्थ मनोगतान् ।
आत्मन्येवात्मनातुष्टः स्थितप्रज्ञस्तदोच्यते ॥

" ப்ரஜஹாதி யதாகாமான் ஸர்வான் பார்த்த
மனோகதான்
ஆத்மன்யேவ ஆத்மனாதுஷ்ட: ஸ்திதப்ரக்ஞஸ்
ததோச்யதே "

என்பது கீதோபதேசம்.

உள்ளத்தில் ஓயாது ஆசையின் தூண்டுதலால் எழுந்து வருகின்ற மனோ விகாரங்களை ஒதுக்கித் தள்ளுதல் வேண்டும். அலையற்ற மானசரோவரம் போன்று மனதை நிராசையில் நிலைத்திருக்கச்செய்தல் வேண்டும். மானசரோவரம் போன்று மனம் தூய நிலையில் இருக்க வேண்டும். அப்பொழுது தான் ஆத்ம சொருபம் விளங்குகின்றது. ஆத்மசொருபம்தான் நம்முடைய நிஜசொருபம். நமக்கும், பரமாத்மாவுக்கும் உள்ள தொடர்பை அறியும்பொழுது தான் நம்முடைய ஆன்மீகப் பெருவாழ்வு ஆரம்பமாகின்றது. உலகியல் அறிவு உலக வாழ்வை நன்கு அமைத்துக்கொள்ளப் பயன் படுகிறது. ஆன்ம ஞானம் ஆன்ம வாழ்வில் உறுதி பெறுவதற்கு உதவுகின்றது. மனப் பக்குவம் அடைந்து வருவதற்கு அறிகுறி, அது ஆன்மீக வாழ்வில் நாட்டமுடையதாக இருக்க வேண்டும். ஆன்ம ஞானம் பெறுவது ஞான மார்க்கத்தின் குறிக்கோளாகும்.

அக்ஞானத்தின் விளைவாகப் பிரபஞ்ச வாழ்வில் உழன்றுகொண்டிருக்கின்றோம். எவ்வளவு காலமாக இப்பிரபஞ்ச வாழ்வில் உழன்று கொண்டு வந்திருக்கின்றோம் என்பது நமக்குத் தெரியாது. பிறப்புகள் பல எடுத்து இப்பிரபஞ்ச வாழ்வில் கட்டுண்டு கிடக்கின்றோம்.

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகி......
......எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்"

என்கிறார் மணிவாசகப் பெருமான். கோடானு கோடி வருஷம் நாம் வாழ்ந்த வாழ்க்கை எல்லாம் கற்பனை வாழ்வாகும். கனவில் ஒரு நிமிடத்தில் நூறு வருடங்கள் வாழ்வு வாழ்வதுபோன்று காண்கின்றோம். நனவில் வாழ்ந்த கோடானு கோடி வருஷங்களும் கற்பனையே யாகும். ஞானம் உதயமாகும் பொழுது கோடானு கோடி வருஷங்கள் வாழ்ந்த வாழ்வு மாயமாய் மறைந்து போகிறது. கற்பகாலமும் கணப் பொழுதும் ஞானம் உதயமாகும்பொழுது ஒன்றாகிவிடுகின்றன. காலத்தைக் கணக்கிடுவதற்கு மனது ஒரு கருவியாக இருக்கின்றது. மனதற்ற நிலையில் காலம் காலாதீதத்துக்குச் சென்றுவிடுகிறது. காலாதீதத்தில் நாமும் நம் நிஜ சொருபத்தில் இருக்கின்றோம். 'மனதற்ற பரிசுத்த நிலையை அருள்வாய்' என்று தாயுமானவர் இறைவனிடம் பிரார்த்திக்கின்றார். காலத்தில் கட்டுண்டு கிடக்கின்ற நாம் காலாதீதத்துக்குச் செல்லவேண்டும். ஞானம் பெறுவதே காலாதீதத்துக்குச் செல்லும் உபாயமாகும். மனோ விருத்திகளை ஞான மார்க்கத்தின் மூலம் நாசம் செய்துவிடுகிறபொழுது மனம் என்று சொல்வதற்கு நம்மிடத்தில் ஒன்றுமில்லை. ஞானமார்க்கத்தின் துணைகொண்டும், ஈசுவர அனுக்கிரகத்தின் துணைகொண்டும் சிரத்தையோடு சாதனையில் ஈடுபட்டு ஞான சித்தி பெறுவோமாக.

(முற்றும்)

# துளசிதாசர் சரிதம்

(335ஆம் பக்கத் தொடர்ச்சி)

துளசிதாசர் அனுமானின் காட்சி பெற்று அவர்மூலம் அத்யாத்ம இராமாயணத்தைக் கேட்கலானர். அனுமார் அவருக்கு உபதேசித்த அத்யாத்ம ராமாயணமாவது: ''மோட்சம் என்னும் அயோத்தியில் பிரம்மம் என்னும் தசரதமன்னன் இருந்தார். அவருக்கு ஞான சக்தி, இச்சா சக்தி, கிரியாசக்தி என்னும் மூன்று மனைவியர் இருந்தனர். ஞானசக்தி என்னும் கௌசல்யாதேவியினிடத்து ஜீவாத்மன் என்னும் ராமன் பிறந்தார். அவர் சிரவணம் என்னும் வசிஷ்டரிடம் பயிற்சிபெற்ருர். மனனம் என்னும் விசுவாமித்திரரைத் தொடர்ந்தார். வைராக்யம் என்னும் லக்ஷ்மணனுடன் வாழ்க்கை நடாத்தினர். ஆணவம் என்னும் தாடகையை அழித்தார். பொருமை என்னும் வில்லை ஒடித்தார். ஆனந்தம் என்னும் சீதையை மணந்தார். மதம் என்னும் பரசுராமரை அடக்கினர். சித்தம் என்னும் சரயு நதியைக் கடந்தார். தவம் என்னும் சித்திர கூடத்தில் தங்கினர். அகங்காரம் என்னும் விராதனைக் கொன்ருர். காமம் என்னும் சூர்ப்பணகையைத் தண்டித்தார். சுபவாசனை என்னும் வானரங்களைத் தம்முடன் சேர்த்துக் கொண்டு மோஹம் என்னும் சமுத்திரத்தைத் தாண்டி அசுபவாசனை என்னும் அசுரர்களை அழித்தார். சாத்விகம் என்னும் விபீஷணனுக்கு அடைக்கலம் தந்து தாமசம் என்னும் கும்பகர்ணனையும்,ராஜசம் என்னும் ராவணனையும் ஞானம் என்னும் பாணத்தைத் தொடுத்து அழித்தார். மோட்சம் என்னும் அயோத்திக்கு அரசனுகி, கைவல்ய பிரமானந்த சொரூப சாக்ஷாத்காரம் பெற்ருர்.''

இங்ஙனம் அனுமான் கூறிய அத்யாத்ம ராமாயணத்தைக் கேட்ட துளசிதாசர் தம்மை மறந்து ஆனந்தத் தாண்டவம் செய்தார். இந்நிகழ்ச்சிக்குப் பின் காசியம்பதியிலுள்ள மக்கள் துளசிதாசரை வணங்கி வாழ்த்தினர்கள். துளசிதாசரும் மக்கள் அனைவரையும் அன்புடன் உபசரித்தார். அவர் பல சாதுக்களுடன் காசியம்பதியில் மடம் அமைத்துப் பிரம நிஷ்டை கூடியவராக ஆனந்தத்தில் திளைத்திருந்தார்.

ஒருநாள் இரவு துளசிதாசர் மடத்தில் நெடுநாள் சாதுக்களாக இருந்த நால்வர் மடத்தி லிருந்த விலை மதிப்புள்ள பொருள்களைத் திருடிக்கொண்டு வெளியேறினர். அப்பொழுது ஸ்ரீமந் நாராயணன் இரண்டு காவலர்கள் வடிவத்தில் வந்து அந்நால்வரும் மடத்திலிருந்து வெளியேறுவதைத் தடுத்தார். அந்நான்கு பேர்களும் அக்காவலர்களை நோக்கி "காவலர்களே, இப்பொருள்களை நீங்களும் நாங்களும் சேர்ந்து பகிர்ந்துகொள்ளலாம்" என்று கூறினர்கள். அதைக் கேட்ட காவலர்கள் அவர்களுடைய கழுத்தைப் பிடித்து மடத்துக்குள் தள்ளி மற்றச் சாதுக்களையும் எழுப்பிவிட்டார்கள். மற்றச் சாதுக்கள் எழுந்திருக்கவே காவலர்கள் வடிவத்திலிருந்த ஸ்ரீமந் நாராயணன் மாயமாய் மறைந்துவிட்டார். மடத்திலுள்ள சாதுக்கள் அந்நால்வரையும் விளக்கு வெளிச்சத்தில் பார்த்தபொழுது மடத்தில் வெகு நாட்களாகச் சாதுக்கள் வேடத்தில் இருந்தவர்கள் என்பதை அறிந்தார்கள். உடனே அவர்கள் கோபம் கொண்டு ''விசுவாசத் துரோகிகளே, அவிவேகிகளே!" என்று அவர்களை வைது, அவர்களுக்கு நன்ருகத் தண்டனை கொடுத்துக் களவாடிய பொருள்களுடன் துளசிதாசர் முன் கொண்டு போய் அவர்களை நிறுத்தினர்கள். துளசிதாசரைப் பார்த்து, ''சுவாமீ! இந்த மூடாத்மாக்கள் தங்களுக்குத் தேவையான பொருள்களை எங்களைக் கேட்டுப் பெற்றுக் கொண்டு போகாமல் திருடிச்சென்ருர்கள். அப்பொழுது நம் காவலர்கள் கண்டுபிடித்து இவர்களை எங்களிடம் ஒப்படைத்தார்கள்.இவர்களை இப்பொழுது உங்கள் முன் நிறுத்தியுள்ளோம்'' என்ருர்கள். துளசிதாசர் அவர்களைக் கருணையுடன் கூர்ந்து பார்த்தார். 'அவர்கள் விருப்பமானதைத் தயக்கமில்லாமல் எடுத்துப் போகலாம்' என்ருர். அதற்கு அவர்கள் பகர்ந்ததாவது: ''சுவாமீ, நாங்கள் இரவு பட்டபாடு போதும். நாங்கள் இரவில் பட்ட கஷ்டத்தை நினைத்தாலே எங்களுக்கு நெஞ்சு பிளந்து போகும்போல் இருக்கிறது. மடத்து வாயில்

களில் இருந்த காவலர்கள் எங்களைக் கொடிய துன்பத்துக்கு உள்ளாக்கி இந்தச் சாதுக்களிடம் எங்களைக்காட்டிக்கொடுத்துவிட்டுப்போய் விட்டார்கள்" என்று கூறி அழுதார்கள். துளசிதாசர் "உங்களைத்துன்புறுத்திய காவலர்களைக் காட்டவேண்டும்" என்று கூற நான்கு வாயில்களிலும் போய்த் தேடிப்பார்த்தார்கள். யாரும் ஆங்கில்லை. துளசிதாசருக்கு அவர்களை மடத்தை விட்டுப் போகாமல் தடுத்து இங்கு ஒப்படைத்தது ரகுநாதருடைய செயல் என்று மனதில் பட்டது. உடனே துளசிதாசர் அவர்களைப் பார்த்துப் பகர்ந்ததாவது: "தவறு செய்து விட்டு உலகத்தவர்களிடமிருந்து தப்பித்துக் கொள்ளலாம். ஆனல் தெய்வத்திடமிருந்து தவறு செய்தவர்கள் தப்ப முடியாது. நீங்கள் செய்த தவறுக்கு ஸ்ரீ ராமனே உங்களைத் தண்டித்திருக்கிருர். இனிமேல் நீங்கள் திருந்தியவர்களாய் மாறி விடவேண்டும். பாசாங்கு பண்ணுபவர்கள் தண்டனைக்குள்ளாவார்கள். நீங்கள் சாதுக்கள் போன்று வெளியில் வேடம் பூண்டால் மட்டும் முன்னேறி விட முடியாது. வஞ்சகம் பண்ணியவர்கள் வஞ்சிக்கப்படுவார்கள். நேர்மைதான் முன்னேற்றத்துக்கு உதவும். நேர்மையான தவ வாழ்வு வாழ்ந்து உங்களைக் கடைத்தேற்றிக்கொள்ளப் பாடுபடுங்கள். உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்வது போன்று மடத்தில் இருந்து கொண்டே மடத்துச் சொத்தை அபகரித்துப் போக நினைத்தது பெரும் தவருகும். பகவான் மீது பற்று வைத்து உலகப்பற்றை ஒழித்து வாழ்பவர்களுக்குத்தான் ஆச்ரம வாழ்வு பயன் படும். புனித இடத்தில் பாபம் செய்கிறவர்களுக்குத் தண்டனை அதிகமாகத்தான் இருக்கும்." இந்நிகழ்ச்சியின் மூலமாகவும், துளசிதாசரின் உபதேசத்தின் மூலமாகவும் அந்நால்வர்களும் திருந்தி அமைந்தார்கள். மடத்திலிருந்து ஒழுக்கமான வாழ்வு வாழ்ந்து உயர்நிலை அடையத் தீர்மானம் செய்து கொண்டார்கள்.

பொய் ஒழுக்கமும், பொய்வேடமும் உடையவர்கள் வாழ்க்கையில் எவ்வித முன்னேற்றமும் அடைய முடியாது.

"மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின்"

என்பது குறள். புறத்தோற்றத்தில் நல்லவர்களாக நடித்து மனதில் வஞ்சனையும், சூதும், பொருமையும் உடையவர்கள் கீழ்மையை அடைவார்கள். மனபரிபாகத்தில் அவர்கள் மிகக் கீழானவர்களாகிருர்கள். வள்ளலார் 'உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்' என்கின்ருர். உள்ளத்தில் உள்ளதை உள்ளபடி பேசுகின்றவர்கள் உயர்நிலையை அடைவதற்கு வாய்ப்பு உண்டு. உள்ளத்தில் உள்ள கேட்டைப் புறச் செயல்களால் மறைக்க முயல்கின்றவர்கள் முன்னேறமாட்டார்கள். துளசிதாசர் மடத்திலிருந்த அந்த நான்கு சந்நியாசிகளும் மடத்திலிருந்த பொருள்களை அபகரித்துக்கொண்டு போவதற்குத் தக்கசமயத்தை எதிர்பார்த்திருந்தார்கள். எனவே அவர்கள் ஆங்கு ஜபம், தியானம் செய்வதுபோன்று பார்ப்பவர்களுக்குத் தென்பட்டாலும் உண்மையில் அவர்களுடைய உள்ளத்தில் பொருளை அபகரித்துச் செல்வதற்கான எண்ணமே வளர்ந்து வந்தது. அது இறுதியில் செயலாக வடிவெடுக்கும் பொழுது அவர்களுடைய கீழ்மை விளங்கியது. துளசிதாசருடைய பார்வையினல் அவர்களுடைய கீழான மனது திருத்தி அமைக்கப் பட்டது. அதன் பிறகு அவர்கள் செய்த சாதனை மேலும் மேலும் மனதைத் தூய்மையாக்கி வந்தது. நம்முடைய ஒவ்வொரு செயலும் மனமாசைத் துடைக்கவேண்டும். மனதில் உள்ள மாசை மறைத்து வைப்பதற்காகச் செய்யப்படும் செயல்கள் அந்தக் கேட்டை மேலும் வளர்க்கும்.

துளசிதாசருடைய மனைவி ஒரு சமயம் சாதுக்கள் எல்லார்க்கும் பெரும் விருந்து வைத்தார். சாதுவேஷத்தில் பகவான் அவ்விருந்திற்கு எழுந்தருளினர். அவ்விருந்தில் கலந்து கொண்டவர்களைப் பார்த்துச் சாது வடிவத்தில் இருந்த பகவான் பகர்ந்ததாவது: "சாதுக்களே, நீங்கள் அனைவரும் மிகவும் புனிதம் வாய்ந்தவர்களாக இருக்கின்றீர்கள். நான் ஒரு பிராம்மணனை அறிவீனத்தினல் கொன்ற பிரம்மஹத்தி தோஷத்தை நீக்கும் பொருட்டுக் கங்கையில் நீராட வந்தேன். நீராடியபின் பசி ஏற்பட்டது. அப்பசியைப் போக்குவதற்கு இவ்விருந்துக்கு வந்துள்ளேன். இந்தப் பாவியை உங்களுடன் உண்ணும்படி அனு

மதிப்பீர்களா? பசியின் கொடுமை தாங்க முடியவில்லை. எப்படியாவது நீங்கள் அனுமதிக்க வேண்டும்.'' இதற்கு விருந்தில் பங்கு கொண்ட எல்லாரும் ஆக்ஷேபணை செய்தார்கள். 'இந்தப் பாவியை ஒரு கணமும் இங்கிருக்க அனுமதிக்கலாகாது. இவனை விரட்டி ஓட்டவேண்டும்' என்று எல்லாரும் ஒரே குரலாய்க் கூறினார்கள். அதற்குத் துளசிதாசர் பகர்ந்ததாவது: ''ராமா என்னும் மந்திரத்தைச் சொன்னால் எல்லாப் பாபங்களும் நசித்துப்போகும். அவர் அம் மந்திரத்தைச் சொல்லித் தம்மைப் புனிதப்படுத்திக் கொள்வார். நாமும் அம்மந்திரத்தை ஜபித்துப் புனிதமடைவோம்.'' ஆனால் அங்கு வந்திருந்த அச்சாது அம்மந்திரத்தை உச்சரிக்க மறுத்தார். ''மந்திரத்தை உச்சரிக்காவிட்டால் இங்கு உணவு பெற இயலாது. மந்திரத்தை உச்சரித்து மன அழுக்கைப் போக்கிக்கொண்டு உணவுப் பசியைப் போக்கிக் கொள்வீர்களாக'' என்றார் துளசிதாசர். அதற்கு அங்கு வந்திருந்த சாது ''நீங்கள் கூறிய நாமத்தைத் தவிர வேறு நாமத்தை வேண்டுமானால் உச்சரிப்பேன்'' என்றார். ''மிகவும் மகிழ்ச்சி. உங்களுக்கு விருப்பமான எந்த நாமத்தை வேண்டுமானாலும் உச்சரிக்கலாம். எந்த நாமத்தை உச்சரித்தாலும் நாங்கள் மகிழ்ச்சி அடைவோம்'' என்றார் துளசிதாசர். 'சிவசிவா' என்னும் நாமத்தை வந்திருந்த சாது உச்சரித்தார். அதைக் கேட்டதும் அங்கிருந்தவர்களுடைய உள்ளம் பரமானந்தம் அடைந்தது. துளசிதாசரும் அந்நாமத்தைக் கேட்டவுடன் பரவச நிலையை அடைந்தார். பரவச நிலையோடு சாதுவின் பக்கத்தில் போகும்பொழுது அச்சாது மாயமாய் மறைந்தார். அப்பொழுதுதான் துளசிதாசருக்குச் சாது வடிவில் வந்திருந்தவர் ஸ்ரீமந் நாராயணன் என்பது விளங்கியது. பகவானுடைய லீலையை நினைந்து ஒன்றும் தோன்றாதவராய் ஆனந்த வாரியில் மூழ்கினார் துளசிதாசர்.

துளசிதாசருடைய புகழ் நாடெங்கும் பரவலாயிற்று. அப்பொழுது டில்லிக்கு அரசனாகவிருந்த அக்பர் பாதுஷாவும் துளசிதாசருடைய மகிமையைக் கேள்விப்பட்டார். அவரைப் பார்க்கவேண்டும் என்ற விருப்பம் அக்பருக்கு எழுந்தது. அவர் காசிக்குப் புறப்பட்டு வந்து துளசிதாசரைத் தரிசித்து வணங்கினார். துளசிதாசருடைய உபதேசங்களைக் கேட்டுக்கொண்டு காசியிலேயே சில நாட்கள் தங்கி இருந்தார். துளசிதாசரை மக்கள் நாள்தோறும் வந்து வணங்கிச் சென்றார்கள். அவரிடம் வந்தவர்கள் மனத் துயரம் நீங்கி மனம் சாந்தி பெறுவதை உணர்ந்தார்கள். மக்களுக்குப் பக்தி மார்க்கத்தைப் புகட்டியதோடு தாமே பக்தி நெறியில் நின்று பக்தியின் மகிமையை விளக்கிக்காட்டினார் துளசிதாசர்.

அக்பர் துளசிதாசரிடம் சென்று தமக்கு உபதேசம் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டார். ''அரசனே! நீ எப்பொழுதும் அஜாக்கிரதையாக இருக்கக்கூடாது. சான்றோர்களுடைய உள்ளம் கலங்கும்படி உன் ஆட்சி நிகழக்கூடாது. நல்லவர்களையும், தர்மத்தையும் அரசனாகிய நீ பாதுகாக்க வேண்டும். துர்ப்புத்தியுடைய மந்திரிகளின் பேச்சைக் கேட்கக்கூடாது. எல்லா மதங்களும் ஓர் இறைவனைப்பற்றியே கூறுகின்றன. குரானில் சொல்லப்பட்டிருப்பதும் வேதத்தில் சொல்லப்பட்டிருப்பதும் ஒரு பொருளைப்பற்றியே ஆகும். மனம் உள்முகமாகச் சென்று ஆத்மசொரூபத்தை உணரும் பொழுதுதான் அத்வைத ஞானம் சித்திக்கும். பரம்பொருள், அகண்ட பரிபூரண சச்சிதானந்த நித்திய சுயப்பிரகாசமாய் இருக்கின்றார். அவருடைய மகிமையை யாராலும் எடுத்துச் சொல்ல இயலாது. அக்கினியில் சூடுபோலவும், விளக்கின் நிழலைப் போலவும், கானல் ஜலம் போலவும் மாயா சக்தி ஒன்று உண்டாயிற்று. அது இருள் வடிவமாகும். அகண்ட பிரம்மம் பேரொளி மயமானது. அப்பேரொளி ஆகிய தீபத்தின் நிழல் போன்றது மாயை. அம்மாயை என்னும் சக்தியினால் ஆகாசமும், அதிலிருந்து மற்ற பூதங்களும் தோற்றத்துக்கு வந்தன. பஞ்சபூதங்களின் சேர்க்கையே இப்பிரபஞ்சமாகத் தோற்றம் தருகிறது. சூரியனுடைய வெப்பத்தால் கடல்நீர் ஆவியாகி மேகமாக மாறுகிறது. பிறகு அம்மேகம் சூரியனையே ஒரு கணம் மறைக்கிறது. அதுபோன்று பரப்பிரம்மத்திலிருந்து தோன்றிய மாயை பரப்பிரம்மத்தையே மறைத்து வைத்திருக்கிறது.

மாயைக்கு வசப்பட்ட ஜீவன் இச்சையைப் பெருக்கிப் பிறப்பு, இறப்பு என்னும் பெருங் கடலில் தத்தளித்துக் கொண்டிருக்கின்ருன். தேகத்தைத் தான் என்று அகங்கரித்து நிற்கும் பிரமை உடையவன் ஜீவாத்மன். தேகத்துக்கு சாட்சிமயமாக இருக்கின்ற ஆத்மன் தன் நிஜ சொரூபம் என்பதை அவன் உணராதிருக்கின் ருன். மாயையில் இருப்பவர்களுக்கு விசித்திர மான சித்திகள் சித்திக்கும். அவர்களுக்குப் பிரம்ம ஞானம் இல்லாமையால் அகங்காரம் விருத்தியடைந்து இறுதியில் துக்கத்தை அடை கின்றனர். பிரம்மத்தை நாடினவர்கள் சித்தி களைப் புறக்கணிக்கின்ருர்கள். அவர்கள் அகண்டாகாரமாகிய பிரம்ம ஞானம் என்னும் கைவல்யப் பேற்றினை அடைகின்றனர். திரி கரண சுத்தியோடு பரப்பிரம்மத்தை வழிபடு கின்றவன் பரம பக்தன் ஆகின்ருன். பகவத் பக்தியும், யோகமும் கூடினல் முக்தியை எளி தில் அடையலாம். இப்பேர்ப்பட்ட மேலான நிலையை மறந்து உலகத்தில் உழன்று வினை யைப் பெருக்கிக்கொண்டிருப்பவர்கள் யமன் வருகின்றபொழுது என்ன செய்வார்களோ? எத்தனை நாள் இருந்தாலும் ஒருநாள் இந்தத் தேகம் அழியத்தான் போகிறது. ஒருநாள் அழிந்துபோகும் இத்தேகத்தைப் பொய்யென ஒதுக்கித்தள்ளிவிட்டு மெய்வாழ்வு வாழாமல் காலத்தை வீணுக்கலாமா? மண்ணினல் செய்த பாண்டம் உடைந்து மண்ணுவது போன்று பஞ்சபூதங்களால் ஆன சரீரம் மீண்டும் பஞ்ச பூதங்களிலேயே சேர்ந்துவிடும். குருடன் ஒருவ னுக்குச் சூரிய ஒளியைப்பற்றி எவ்வளவுதான் கூறினலும் அது விளங்காதது போன்று, தேகம் நிலையற்றது என்பதை மந்தமதி படைத் தவர்களுக்கு எவ்வளவுதான் எடுத்துக்கூறினு லும் விளங்குவதில்லை. மதவெறி பிடித்தவர்கள் எங்கள் வேதம் மெய் என்றும், உங்கள் வேதம் பொய் என்றும் எங்கள் தெய்வம் சத்தியம் என்றும், உங்கள் தெய்வம் அசத்தியம் என்றும் வீண் சழக்கிட்டுத் தங்களை அறிந்துகொள்ளா மலும் தங்களுக்குள் இருக்கும் ஆனந்தத்தை அனுபவிக்காமலும் காலத்தை வீணுக்கி வரு கின்ருர்கள். மேலும் அவர்கள் உத்தமர்களைப் பழித்து யமன் வருங்காலத்தில் சொல்ல முடி யாத துயரத்தை அடைகின்ருர்கள்.

''பிரம்ம ஞானம் அடைவதற்குச் சற்குரு கிருபையும், இஷ்ட தேவதையின் வரப்பிரசாத மும் அவசியம் வேண்டும். ஆகையால் அரசனே, நீ தெய்வ பக்தியும், சாதுக்கள் சேவையும் செய்து அப்பெருநிலை அடைவதற்கு முயல்வா யாக. சிரத்தையுடன் நீ அவற்றைச் செய்தால் இறுதியில் பிரம்ம ஞானம் அடையலாம்.'' இங் ஙனம் அக்பருக்கு உபதேசம் செய்துவிட்டு அவரிடமிருந்து விடைபெற்றுக்கொண்டு துளசி தாசர் மதுரா, பிருந்தாவனம் முதலிய புண் ணிய க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை சென்ருர். அவ்விடங்களிலெல்லாம் அவர் ஆனந்தமேலீட் டால் தம்மை மறந்து பிரம்ம நிஷ்டை கூடின வராய்த் திகழ்ந்தார். அக்பரும் துளசிதாசரு டைய உபதேசத்தை நடைமுறைக்குக்கொண்டு வருவதில் சிரத்தை காட்டிப் பெருவாழ்வு வாழ்ந்து வந்தார்.

நாடெங்கும் பகவத் பக்தியைப் பரப்பி மக்க ளிடையே உண்மையான பக்தியை இன்ன தென்று விளக்கிக்காட்டி இறுதியில் துளசி தாசர் உடலிலிருந்து பிரிந்து பரப்பிரம்மத்தில் லயமானுர். துளசிதாசருடைய மனைவி மமதா தேவியும் பக்திமதியாக இருந்து, பக்தியைப் பரப்புவதில் துளசிதாசருக்குத் துணையாக இருந்து, தெய்விக வாழ்வு வாழ்ந்து வந்தாள். பர்த்தாவுக்கு ஏற்ற பதிவிரதையாக வாழ்ந்து பர்த்தா அடைந்த பரமபதத்தைத் தானும் அடைந்தாள். இல்லறமல்லது நல்லறமன்று என்னும் கோட்பாட்டுக்கு ஏற்ப துளசிதாச ரும், அவர் மனைவியும் இல்லறவாழ்வு வாழ்ந்து இறைவனடி சேர்ந்தார்கள். இல்லறம் துற வறம் என்னும் இரண்டு நெறிகளும் முக்திக்குக் கொண்டு செல்லும் நெறிகளேயாம். மகான் கள் இல்லறம், துறவறம் ஆகிய இரண்டு நெறி களையும் கடைப்பிடித்துப் பெருநிலையை அடைந்துள்ளார்கள். மகான்கள் வாழ்வு மற்ற வர்களுடைய வாழ்வைப் புனிதமாக்குகிறது. மற்றவர்களுக்கு வழிகாட்டவும், ஞானத்தையும், பக்தியையும் அவர்களுக்குப் புகட்டவும், ஞானி களான பின்பும் மகான்கள் இவ்வுலகத்தில் வாழ்ந்திருக்கிருர்கள். மகான்களுடைய வாழ் வைப் படித்தும் கேட்டும் அவர்கள் வாழ்ந்தது போன்று வாழ்ந்தும் நம் வாழ்வைப் புனித மாக்கிக்கொள்வோமாக. (முற்றும்)

---

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-182

992. अव्याजकरुणामूर्तिः அவ்யாஜகருணா மூர்த்தி: இயல்பாகவே கருணை வடிவெடுத்தவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

உலக மக்களுக்கிடையில் கருணையை நாடுகிற மனிதன் ஒருவன் தன்னுடைய பரிதாபகரமான நிலையைக் கருணை காட்டுபவனிடம் தெரிவிக்கிறான். நல்லியல்பு படைத்த அக்கருணையாளனும் தன்னால் இயன்ற உதவியைக் கேட்டவனுக்குத் தருகிறான். அன்னை பராசக்தியின் பாங்கு அத்தகையதன்று. பக்தன் ஒருவனுடைய பாங்கை இயல்பாகவே அவள் அறிகிறாள். அன்னவனுக்குத் தேவையாயிருக்கும் உதவியை அவன் கேட்பதற்கு முன்பே அவள் எடுத்து வழங்குகின்றாள். குழந்தை ஒன்று உறங்கிக்கொண்டிருக்கிறது. உறக்கத்தினின்று விழித்தெழுந்தவுடனே அக்குழந்தையானது பசியால் வாடும் அல்லது அழும் என்பதைப் பெற்றெடுத்த தாய் உணர்கிறாள். ஆதலால் அக்குழந்தை எழுந்திருப்பதற்கு முன்பே அதற்குத் தேவையான உணவை அவள் ஆயத்தப்படுத்தி வைக்கின்றாள். இப்படிச் செய்வது அவ்யாஜ கருணைக்கு அறிகுறியாம். உலகில் உள்ள பெண்பாலோர் அனைவரும் அன்னை பராசக்தியின் சொரூபம். ஆதலால் அவளிடத்துள்ள அவ்யாஜ கருணை இயல்பாகவே பெண்பாலர்களுக்கு அமைகின்றது. அப்படி அமைந்துள்ள கருணையைத் தங்கள் குழந்தைகளிடத்தும் உற்றார் உறவினர்களிடத்தும் உலகத் தாய்மார்கள் காட்டுகிறார்கள். கருணைக்குப் பாத்திரமாய் இருக்கின்ற நல்லவர்கள் எல்லாருக்குமே அவ்வாறு கருணையைக் காட்டுவது தெய்விக சம்பத்தாகும். அத்தகைய தெய்விகச் சம்பத்தில் ஊறியிருக்கும் ஆத்மசாதகர்களுக்கு அன்னை பராசக்தி தன் கருணையைத் தங்குதடையின்றித் தாராளமாய் எடுத்து வழங்குகின்றாள். அண்டநாயகியின் பாங்கு இத்தகையதாம்.

993. अज्ञानध्वान्तदीपिका அக்ஞானத்வாந்த தீபிகா—அக்ஞான இருளை அகற்றும் தீபத்துக்கு ஒப்பானவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

தெரிந்துள்ள ஒரு பொருளைக் கொண்டு தெரியாததை அறிந்து கொள்ளுதல் அறிவு வளர்ச்சிக்கு உற்ற உபாயமாம். காரிருள் ஒன்றிலே கைவிளக்கு ஒன்றை எடுத்துக்கொண்டு மானுடன் ஒருவன் நெடுந்தூரம் போகிறான். அப்படிப் புறப்பட்டுப் போகின்றவனுக்குக் கைவிளக்கு வழி முழுவதையும் காட்டுவதில்லை. அருகிலிருக்கும் சிறிது தூரம் மட்டும் அதன் வெளிச்சம் பாய்கிறது. நடந்து செல்பவனுக்கோ அச்சிறிது தூரம் காட்டப்படுவது போதுமானது. அவன் நடந்து செல்லச் செல்லப் புதிய இடங்களும் கைவிளக்கின் வெளிச்சத்தால் அவனுக்கு விளங்குகின்றன. இந்த உபமானத்துக்கு ஒப்பானது அன்னையின் அருள் ஒளி அல்லது ஞான விளக்கு. ஜீவகோடிகள் அனைத்தினுடைய அந்தக்கரணத்தினுள் பிரக்ஞை என்னும் சுயப்பிரகாசத்துடன் அவள் வீற்றிருக்கின்றாள். அப்படி அமர்ந்திருக்கும் பேரறிவு மயமான அந்தப் பெரிய பொருளின் துணையைக் கொண்டே உயிர்கள் அனைத்தும் படிப்படியாக முன்னேற்றம் அடைந்து வருகின்றன. 'யானேதும் அறியாது என் உள்ளத்தினுள் வந்து நல்லனவும் தீயனவும் காட்டா நின்றாய்' என்பது ஆன்றோர் வாக்கு. மனச் சாட்சியாய் இருந்துகொண்டு தீயதை அவள் விளக்கிக் காட்டியும் அதைக் கீழான இயல்பு படைத்தவர்கள் ஏற்றுக்கொள்ளாது தீய வழியில் சென்று தங்களுக்குத் தாங்களே உபத்திரவத்தைத் தேடிக்கொள்கின்றனர். ஆனால் முற்றிலும் அன்னையைச் சார்ந்திருப்பவர்கள் அவள் ஓயாது காட்டி வருகின்ற நல்வழியில் செல்வார்களாதலால் அதிவேகமாக அவர்கள் முன்னேற்றம் அடைவது சாத்தியம். அவளைப் பற்றிய இந்த அரிய கோட்பாட்டை ஆத்மசாதகர்கள் யாண்டும் ஞாபகத்தில் வைத்துக் கொள்வார்களாக.

994 आबालगोपविदिता ஆபாலகோப விதிதா—குழந்தைகளும் இடையர்களும் உட்பட எல்லாராலும் எளிதில் அறிந்துகொள்ளக் கூடியவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

மக்கள் மட்டுமல்லர், சிற்றுயிர்களும் கூடத் தங்களுடைய வாழ்க்கைக்குத் தேவையாயிருக்கும் இயற்கையின் சூழ்நிலையைப் பற்றிய அறிவைத் தங்கள் போக்கில் பெற்றுள்ளன. கண்

னில்லாச் சிற்றுயிர்களும் தொட்டுணரும் நீண்ட அவயவங்களை உடைத்திருக்கின்றன. ஆகவே அண்டம் எங்கும் எல்லாப் படித்தரங்களிலும் இருந்துவருகிற உயிர்கள் அனைத்தும் அவ்வவற்றின் ஆற்றலுக்கேற்றவாறு வாழ்க்கையை வெற்றிகரமாகக் கொண்டு செலுத்துகின்றன. இயற்கையில் எங்குமே நாம் காணும் காட்சி இதுவேயாம். பின்பு, அறிவுத்துறையில் மேல்நிலைக்கு வரவர அன்னையின் மஹிமையைத் தெளிவுற அறிந்துகொள்ளும் திறமையும் உயிர்களுக்குத் தானாக வந்து அமைகிறது. ஆதலால் வாழத்தெரியாமல் திண்டாடுகிற உயிர் ஏதும் பிரபஞ்சத்தில் இல்லவே இல்லை. ஆதலால்தான் குழந்தைகளும் இடையர்களும் உட்பட எல்லாரும் அறிந்துகொள்ளும் பாங்குடையவளாக அன்னை மிளிர்ந்துகொண்டிருக்கிறாள் என்பது வெளிப்படை.

*995* **सर्वानुल्लङ्घ्यशासना** ஸர்வா னுல்லங்க்ய சாஸனா — யாராலும் மீற முடியாத கட்டளையை உடையவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

பௌதிக விக்ஞானம் இயற்கையின் பாங்குகள் பலவற்றை இன்றைக்கு வென்று வருகிறது. வானவெளியில் சஞ்சரிப்பதும் பயணம் போவதும் இயற்கைத் தாயின் திட்டத்தில் மானுடவர்க்கத்துக்கு இல்லை என்று சிறிது காலத்துக்கு முன்பு மனிதன் நம்பி வந்தான். அத்தகைய நம்பிக்கை இன்றைக்குப் பின்னணிக்குப் போய்விட்டது. வெட்ட வெளி சஞ்சாரத்தை இன்றைக்கு மனிதன் சர்வசாதாரணமாகச் செய்துவருகிறான். இது அம்பிகையின் ஆணையை மீறிய செயல் அல்லவா? என்னும் கேள்வி பிறக்கலாம். மற்று, இயற்கையின் கூறுகள் வேறு, அன்னையின் ஆணை வேறு. இயற்கையின் கூறுகளை மனிதன் வேண்டியவாறு மாற்றியமைக்கலாம். மற்று, மனிதனுடைய இன்ப துன்பங்களை மாற்ற மனிதனுக்கு இம்மியளவும் இயலாது. பௌதிக விக்ஞானத்தின் விளைவாகத் துன்பத்தைக் குறைக்கவோ தடுக்கவோ மனிதனுக்குச் சாத்தியம் என்று அவன் எண்ணி வந்தான். ஆனால் பௌதிக விக்ஞானம் மனிதனுக்குப் பண்ணுகிற பணிவிடைகளின் வாயிலாக அவனுடைய இன்பம் அதிகரிப்பதற்கு ஏற்பத் துன்பமும் அதிகரித்துக்கொண்டே வருகிறது. மற்று, மனிதன் வேண்டுவது துன்பம் கலவாத இன்பம். அத்தகைய மங்களகரமான செயலைச் செய்து சாதிப்பது அன்னை பராசக்திக்கே சாத்தியம். அவளைச் சார்ந்திருக்க மனிதன் கற்றுக்கொள்ள வேண்டும். அன்னையின் திட்டத்தை மீறி மனிதன் எதையும் சாதிக்க முடியாது என்னும் கோட்பாடு அற்புதமான பாங்கில் உபநிஷத்தில் அமைந்திருக்கின்றது. தேவர்கள் அசுரர்களை வென்றுவிட்டதாக எண்ணிக் கர்வம் பூண்டனர். அப்பொழுது அதிசயமான மூர்த்தி ஒன்று அவர்களுடைய எதிரில் தென்பட்டது. அந்த மூர்த்தியை அறிந்துகொள்ள அக்னிதேவன் புறப்பட்டுப் போனான். அக்னியின் வல்லமை யாது என்று அந்த அதிசய மூர்த்தி வினவியது. எதை வேண்டுமென்றாலும் தகித்துச் சாம்பலாக்கும் திறமை தன்னிடத்திருப்பதாக அக்னிதேவன் தெரிவித்தான். ஒரு துரும்பை அவன் எதிரில் போட்டு அதைத் தகிக்கும்படி தென்பட்ட அதிசய மூர்த்தி ஆக்ஞாபித்தது. அந்தச் சிறிய துரும்பைச் சாம்பலாக்க அக்னிக்கு இயலவில்லை. தோல்வியடைந்த அக்னி தேவன் பின்வாங்கினான். அடுத்தபடியாக அச்சிறிய துரும்பை இடத்தைவிட்டு அசைக்க வாயுதேவனுக்கு இயலாது போயிற்று. இங்ஙனம் இந்திரன் உட்பட தேவர்கள் எல்லாரும் தோல்வியடைந்தனர். அந்த மூர்த்தி அழகுவாய்ந்த அன்னை பராசக்தியாய் வடிவெடுத்துத் தானும் பரப்பிரம்மமும் ஒன்றே என்னும் உண்மையை அவர்களுக்குத் தெரிவித்தாள்.

சக்தியும் சிவமும் ஒன்றே. மூர்த்திகள் இரண்டாகத் தென்படினும் சொரூபத்தில் அவர்களுக்கிடையில் வேற்றுமையில்லை. அன்னையின் ஆணையே அண்ணலின் ஆணையாகிறது. அண்ணலின் ஆணையே அம்பிகையின் ஆணையாகிறது. அம்மூலப் பொருளைச் சார்ந்திருப்பது ஒன்றே மனிதன் புரிகிற செயல்கள் அனைத்திலும் தலைசிறந்ததாம். பரம்பொருளைச் சார்ந்திருப்பதற்கேற்ப இம்மை, மறுமைக்குரிய சம்பத்துக்கள் அனைத்தும் மனிதனுக்கு வந்து வாய்க்கின்றன. அன்னையின் ஆணைக்குப் புறம்பாக ஓர் அணுவையும் அசைக்க மனிதனுக்கு இயலாது என்பது கோட்பாடு.

# ஸத் ஸம்பாஷணை

கேள்வி : (374) ராஜாஜியின் வியாசர் விருந்திலும் அ. லெ. நடராசனின் மொழி பெயர்ப்பிலும் கிருஷ்ணனிடம் உதவி பெறத் துரியோதனன் முதலிலும் அர்ஜுனன் பின்னுலும் சென்றதாக உள்ளது. தங்களின் கீதைக்கான வியாக்கியானத்தில் முகவுரையில் அர்ஜுனன் முதலில் வந்ததாகக் குறிப்பிட்டுள்ளீர்கள். இந்த முரண்பாட்டிற்குத் தயவு செய்து விளக்கம் தர வேண்டுகிறேம்.

இந்த முரண்பாடுகள் மஹாபாரத நடைமுறைக்கு எந்த விதத்திலும் ஊறு செய்ய மாட்டா. வியாசர் இயற்றிய மஹாபாரதத்தில் துரியோதனன் முதலில் வந்ததாக அமைந்திருக்கிறது. ஆகவே, அதைத்தான் பிரமாணமாக ஏற்றுக்கொள்வது முறை. அதினின்று மாறுபட்டதாகத் தபோவனம் கீதையின் முன்னுரையில் எழுதியிருப்பது அர்ஜுனனுடைய மனப்பான்மையை வெளிப்படுத்துதற்பொருட்டேயாம். கிருஷ்ண பரமாத்மா சயனித்துக் கொண்டிருந்த கூடத்தினுள் ஒரே ஓர் ஆசனம் தான் போட்டு வைக்கப்பட்டிருந்தது. முதலில் வந்த அர்ஜுனன் அதைப் பயன்படுத்தியிருக்கலாம். ஆனல் அந்த ஆசனம் அமைந்த இடமோ கிருஷ்ணனுடைய தலைமாட்டின் பின்புறம். கிருஷ்ணன் விழித்து எழுந்தவுடன் தன் கால் பக்கம் இருப்பதைத் தான் முதலில் காண்பான். உறங்குபவனை எழுப்புவது பொருந்தாது. விழித்துக் கொண்டவுடன் சிரமமின்றி அவனுடைய பார்வையில் படுவது கால் பக்கம் இருக்கும் பிரமுகனேயாம். இக்கருத்தை அடிப்படையாக வைத்துக்கொண்டு முதலில் வந்த அர்ஜுனன் வேண்டுமென்றே பக்தி பூர்வமாகக் கிருஷ்ணனுடைய பாதத்தின் பக்கம் நின்று கொண்டிருந்தான் என்பது நம் கற்பனை. நல்ல கருத்துக்களை விளக்குதற்பொருட்டுச் சிறிய மாறுதல் பண்ணுவது பெரிய திட்டத்துக்கு இழுக்காகாது.

கேள்வி: (375) புத்தர் இறைவனைப்பற்றி ஏதும் கூறுமல் ஆசையே துன்பத்திற்குக் காரணம் என்றும் பிறவிப்பிணியிலிருந்து விடுபட எட்டு விதிகளைக் கடைப்பிடிக்கவேண்டும் என்றும் கூறுகிறுர். அதன்படி இறைவனை வழிபடாமல் அந்த எட்டுவிதிகளைக் கடைப்பிடித்தால் போதுமா?

புத்தர்பெம்மான் கடவுளைப்பற்றி உண்டு என்றே இல்லை என்றே யாதும் பகராதிருந்ததற்குக் காரணம் அக்காலத்திய சூழ்நிலையேயாம். கடவுள் வழிபாட்டின் பெயரால் மிகைபட உயிர்ப்பலியிடுவது அக்காலத்தில் இருந்து வந்த பெரிய கொடுமையாம். அக்கொடுமையை அகற்றுவது புத்தர்பெம்மானுடைய முக்கியமான கடமையாய் இருந்தது. கண்கூடாகத் தென்படும் உயிர்களை முதலில் நேசித்துப்பழகுங்கள். அவைகள் வைத்திருக்கின்ற உயிர்ப்பற்று விவேகிகள் வைத்திருக்கின்ற உயிர்ப்பற்றை விட அதிகமானது. அவைகளை அன்புடன் நேசித்து அவைகள் வாழ்ந்து வரும் வாழ்க்கைக்கு உறுதுணையாவது மனிதனுடைய மேலான கடமை என்று புத்தர் வற்புறுத்துகிறுர். கண்கூடாகத் தென்படுகின்ற உயிர்வகைகளை நன்கு நேசிக்கத் தெரிந்துகொள்ளாதவன் தனக்குத்தானே கற்பனை பண்ணிக் கொள்ளும் தெய்வத்தை நேசிப்பதாக மனிதன் பாசாங்கு பண்ணுகின்றுன். அப்படிப் பாசாங்கு பண்ணுவதைவிட வாழ்ந்திருக்கும் உயிர்வகைகளின் இன்பத்தை வளர்ப்பதன் வாயிலாக மனிதன் மேன்மையுறுகிறுன். அவன் அடைகின்ற மேன்மையும் வெளிப்படையாக விளங்குகிறது. சுயநலம் படைத்துள்ள மனிதன் தான் கற்பனை பண்ணிக்கொள்ளும் தெய்வத்துக்கு உயிர்ப்பலியின் வாயிலாகச் செய்யும் வழிபாட்டில் அவன் எந்த நன்மையும் அடைவதில்லை என்பது வெளிப்படை. புத்தன் புகட்டிய எட்டு விதிகளைக் கையாளுவதன் வாயிலாக மனிதன் மேன்மை அடைவதும் வெளிப்படை. இங்ஙனம் புத்தர் புகட்டியது நம்முடைய யுக்திக்கும் அனுபவத்துக்கும் ஒத்ததாம்.

மற்ற எந்த விதத்திலும் பிற உயிர்களைக் கடவுள் வழிபாட்டின் பெயரால் வதை செய்யாதிருப்பது பாராட்டத்தக்க பெரிய செயலாம். உயிர்களோடு மனிதன் வைக்கின்ற நல்லிணக்கத்தின் வாயிலாக அவனுடைய அந்தக்கரணம் சுத்தி அடைகின்றது. சுத்தி அடைந்த அந்தக்கரணத்தில் மெய்ப்பொருள் தானே விளங்கு

கின்றது. அங்ஙனம் தானே விளங்குகின்ற பொருளைப் பற்றி ஒன்றும் பேசாமல் புத்தர் பெம்மான் மௌனமாயிருந்ததும் பொருந்தியதேயாம்.

நாம் தீவிரமாகக் கடவுள் வழிபாட்டிலும் இறங்கலாம்; புத்தர் பெம்மான் புகட்டிய எட்டு விதிகளையும் தீவிரமாகக் கையாளலாம். அவைகளுக்கிடையில் முரண்பாடில்லை.

கேள்வி: (376) *சீதை கர்ப்பிணியாக இருந்தபோது ஒரு வண்ணானின் பேச்சைக்கேட்டு அவளை இராமன் காட்டுக்குத் துரத்தியது அவளுக்குச் செய்த அநீதி அல்லவா?*

கேள்வி ஒன்றைக் கிளப்புபவனை முன்னிட்டு அக்கேள்வியைப் பெரியது அல்லது சிறியது ஆக்கலாகாது. கேள்வியைக் கிளப்பியது யாராக இருந்தாலும் அக்கேள்வியின் தரத்தைத் தன் அளவைக்கொண்டே மதிப்புப் போடவேண்டும். கிளப்பிய கேள்வியானது ஒரு குடும்பத்தில் நிகழ்ந்த கணவன் மனைவி ஆகியவர்களின் பிணக்கைப்பற்றியதாம். "நம்மோடு பிணங்கிக்கொண்டு வேற்றான் வீட்டிற்குப் போய்த் தங்கியிருந்த மனைவியை நாம் மீண்டும் எடுத்துக்கொள்ளலாகாது. அச்செயலில் இராமன் மக்களுக்கு முன்மாதிரியாக இல்லாமல் தன் போக்கில் நடந்துகொண்டான். நான் அப்படி நடக்கமாட்டேன்" என்று பொதுமகன் ஒருவன் இயம்பினான். அது இராமனின் காதுக்கு எட்டியது.

அரசன் யாண்டும் பொதுமக்களுக்குச் சீலத்தில் முன்மாதிரியாக அமைந்திருக்கக் கடமைப்பட்டிருக்கிறான். குடும்ப நலன், ராஜ்ய நலன் இரண்டிற்குமிடையில் பிணக்கு ஏற்படுமாகில் ராஜ்ய நலனை முன்னிட்டுக் குடும்ப நலனைப் பின்னணிக்குத் தள்ளுவது நெறிபிறழாத அரசனுடைய கடமையாகிறது. அத்தகைய கடமையை நிறைவேற்ற இராமன் தீர்மானம் செய்தான். உண்மையில் அதைவிடப் பெரிய கடமை ஒன்று இராமனுடைய மனதில் இருந்தது. அதை வெளிப்படுத்தாமல் சிறிய கடமையாகிய பொதுமக்களுக்கு முன்மாதிரியாக வேண்டும் என்னும் கோட்பாட்டிற்கிணங்க இராமன் கொடியதாகத் தென்பட்ட அச்செயலில் இறங்கினான்.

கர்ப்பிணியாயிருந்த சீதைக்கு அரண்மனை வாசத்தைவிடச் சாலச் சிறந்தது ஆரண்யத்தில் ஆசிரம வாழ்க்கை. அதன்மூலம் உண்டாகின்ற நலன் ஒப்புயர்வற்றதாம். ஆனால் அதை ஒரு முகாமையாகச் சொல்லி அனுப்புவதில் சுவாரஸ்யம் ஏதுமில்லை. ஒரு மூர்த்தியினுடைய பரிபாகத்தை வெளிப்படுத்துதற்பொருட்டு முன்னெச்சரிக்கை ஏதும் இல்லாமல் திடீரென்று அம்மூர்த்தியைக் கஷ்டதசைக்கு ஆளாக்குதல் சான்றோர் போக்கு. (Take a man by surprise and you will know what he is made of.) நாட்டின் கடமையை முன்னணியில் வைத்துக்கொண்டு இத்தகைய சோதனையை இராமன் சீதையின்மீது திணித்தான். அவளுடைய தரம் அதன் வாயிலாக வெளியானது. பிறகு ஆசிரம வாழ்க்கையின் வாயிலாக அவள் கர்ப்பத்திலிருந்த சிசு ஆத்ம பரிபாகம் அடைவதற்கு ஏற்ற சூழ்நிலை அமைந்தது. அதற்கெல்லாம் மேலாக அவள் தான் செய்த தவத்தின் வாயிலாக ஆத்மஞானம் அடையப்பெற்றாள்.

எனவே, கொடூரச் செயல்போன்று தென்பட்ட இராமனுடைய செயலில் மூன்று நலன்கள் வந்தமைகின்றன. (1) அரசன் ஒருவன் நாட்டின் நலனை முன்னிட்டுக் குடும்ப வாழ்க்கையில் எத்தகைய தியாகத்தை வேண்டுமென்றாலும் செய்ய ஆயத்தமாய் இருக்கவேண்டும். (2) முன்னெச்சரிக்கை இல்லாமல் சீதையானவள் வெளியே அனுப்பப்பட்டதன் வாயிலாக அவளுடைய திண்மை வெளியாயிற்று. மக்களாகப் பிறந்த ஒவ்வொருவனும் ஒவ்வொருத்தியும் சூழ்நிலையைச் சமாளித்துப் பழகுவது வாழ்க்கைப் பயிற்சியாகும். (3) கேடு போன்று தென்பட்ட சூழ்நிலையில் பரஞானம் அடையப்பெற்றதும் அவள் கர்ப்பத்திலிருந்த சிசுக்களுக்குச் சீதாபிராட்டி தவத்தின் வாயிலாக நல்ல சம்ஸ்காரங்களை வழங்கியதும் ஒப்பற்ற சேவையாகும்.

இராமன் ஒருபொழுதும் அறநெறியினின்று பிசகியவன் அல்லன். அறம் காக்க வந்த நம்பியாகிய அவன் புரிந்த செயல்கள் அனைத்திலும் நன்மையே நிறைந்திருக்கிறது என்பது வெளிப்படை. இவ்வுண்மையை மேற்கூறிய செயல் மூலம் இராமன் விளக்கிக் காட்டியுள்ளான் என்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டும்.

---

# ஸ்ரீமத் பாகவதம்

( சுவாமி ஸதானந்தர் )

ஹஸ்தினபுரத்தில் அந்தப்புரத்தில் விடை பெற்றுக்கொண்டு தேவகி நந்தனன் புறப் பட்டபோது அரண்மனை மாதர் அனைவருடைய கண்களிலும் கண்ணீர் மல்கியது. ஆனால் மாதர்கள் தங்கள் உறவினர்களை, அன்புடைய வர்களை யாராயினும் சரி வழியனுப்பும் போது துயரக் கண்ணீர் சிந்தலாகாது. அப்படிச் சிந்தி னால் தாங்கள் வழியனுப்பும் அன்பனுக்கு ஏதா வது துன்பம் நேரிடலாம். இக்கருத்தைச் சிந்தையில் கொண்டு அவர்கள் கண்ணீரை உடனே அடக்கிக் கொண்டார்கள், துடைத் துக்கொண்டார்கள். மங்கள வாத்தியங்கள் முழங்கின. குருவம்ச மாதரசிகள் மாடங் களில் இருந்துகொண்டு மிக்க அன்புடனும் பாந்தவ்யத்துடனும் கிருஷ்ணனைப் பார்த்துக் கொண்டே புஷ்பங்களைச் சொரிந்து வழி பட்டார்கள். அர்ஜுனன் மிக்க அன்புடன் தன் நண்பனாகிய ஸ்ரீ கிருஷ்ணனுக்கு வெண் கொற்றக்குடை பிடித்தான். உத்தவரும் சாத்யகியும் இருபுறமும் சாமரம் வீசினர்கள். அன்புடையவர்களின் இத்தகைய செயல் களால் யதுவம்சத்தவர்களின் அரசனாகிய கிருஷ்ணன் கழுத்தில் பூமாலையுடன் மிக்க அழகுடன் சோபித்தார். பிராம்மணர்கள் மங் கள வசனங்கள் சொல்லி ஆசீர்வதித்தார்கள். யதார்த்த நிலையில், உயர்நிலையில் குணம், குறி, செயல் அற்றவராகவும் தம்மில் தாம் ஆத்ம திருப்தியுற்றவராகவும் இருக்கிற பகவானுக்கு இந்த ஆசீர்வாதங்கள் அர்த்தமற்றவை. இப்போது ஸ்ரீ கிருஷ்ணனாக மானுட வடிவம் தாங்கி வந்திருப்பதால் அந்த ஆசீர்வாதங்கள் பொருந்தும் என்று ஒருவாறு பகரலாம். கட வுளுக்கு இதனால் ஆகவேண்டியதென்ன? அவர் இவை யாவற்றையும் கடந்தவர்.

பிருந்தாவனக் கோபிகாஸ்திரீகளைப் போலவே ஹஸ்தினபுர குருகுல மாதர்கள் இப் போது கிருஷ்ணனைப் பற்றியே பேசிப் பேசி மகிழ்ந்தார்கள். கிருஷ்ணனைப் பற்றிய எந்த விஷயமும் அவர்களுக்கு ஆனந்தத்தை ஊட்டி யது. அவர்களுடைய காதுகள் உயிர் பெற்று விட்டவை போன்றும் கிருஷ்ணானந்தத்தை அவைகள் கர்ணமிருதமாக ஏற்று ஆனந்திப்பது போன்றும் தோன்றியது. கிருஷ்ணன் அவர்களு டைய இறைவன் ஆகிவிட்டான். அவர்கள் எப் போதும் கிருஷ்ணனைப்பற்றியே பேசி மகிழ்ந் தார்கள். சிருஷ்டிக்கு முன்பு எப்பொருள் இருந் ததோ அதுவே இங்கே கிருஷ்ணனாக வந்துள் ளது. எண்ணற்ற நாமம், ரூபம், குணம், செயல், ஆகியவற்றைத் தோற்றுவித்து மீண்டும் தன் னுள்ளேயே எது ஒடுக்கிக்கொள்கிறதோ, இப் பிரபஞ்சத்தின் அவ்யக்த நிலையிலும் சத்தாக, சாஸ்வதமாக எது இருந்து வருகிறதோ அந் தப் பரம்பொருள் அதோ போகிறது. அவ ருடைய சிருஷ்டி முழுவதும் மாயை. அவரோ மாயையைக் கடந்தவர். தம்மிடத்திலிருந்து தம் சங்கல்பத்தினின்று தோன்றிய மாயை அல்லது பிரகிருதியோடு அவர் விளையாடு கிறார். அதன் விளைவாக நாம ரூபங்களோடு கூடிய பேதங்களே வடிவெடுத்த சிருஷ்டி, பிர பஞ்சம் என்ற பெயரில் தோன்றுகிறது. அந்த ஜகந்நாதன் வேதங்களைத் தோற்றுவித்தார், நமக்கும் காட்டியருளினர். அதில் கிரியா விசேஷங்களும், அனுஷ்டானங்களும் அடங் கியிருக்கின்றன. அவைகள் பாமரனுக்குக் கடவுள் ஞாபகத்தைத் தூண்டுகின்றன, வளர்க்கின்றன, பின்பு பாதுகாக்கின்றன. உத்தம விரதிகளான முனிவர்கள் இந்திரியங் களையும் மூச்சையும் அடக்கி மனதில் எப் பொருளைத் தியானிக்கிறார்களோ அப்பெரிய பொருளைப் பந்தபாசம் மிக்கவர்களும் அறியா மையில் உழல்கிறவர்களுமாகிய பெண்பாலர் களாகிய நாம் வேறு எவ்விதம்தான் தரிசிக்க வல்லோம்? அப்பெரிய பொருள் நம்மை விட்டு அதி தூரத்துக்குப் போக நாம் விடக் கூடாது. நாம் அவரைப் பின்பற்றிப் போவோம். எல்லா ஆத்மார்த்த நூல்களும் அப்பெரிய பொருளைக் கடவுள் என்றும் அவர் பிரபஞ்சம் முழுதிலும் ஊடுருவி நீக்கமற நிறைந்துள்ளார் என்றும் சாற்றுகின்றன. அவர் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் ஆகிய முத் தொழிலைச் செய்கிறார். ஆனால் அவருக்கு இப் பிரபஞ்சத்தில் எதனிடத்தும் பற்றுதல் கிடை

யாது. இது அவன் ஆனந்தக் கூத்து.

செல்வம், அதிகாரம், அந்தஸ்து, போகம் இவைகளில் நெடிது வாழ்வதன் விளைவாக அரசர்கள் நாளடைவில் தங்கள் நல்லறிவை இழந்து தமோகுணம் நிறைந்தவர்களாகி மமதையினால் பாபச் செயல்களில் இறங்குகிறார்கள். தங்கள் பதவிகளை இழிந்த முறையிலும் பாபமான தீயவழிகளினாலும் காப்பாற்றிக்கொள்ள முயல்கிறார்கள் அப்போது சமூகத்தில் அக்கிரமங்கள் பெருகுகின்றன. அப்பொழுது பரிசுத்தரும், சத்துவகுணம் நிறைந்தவருமான பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் நல்லவர்களைக் காக்கவும் தர்மத்தை நிலைநாட்டவும் சமூகத்தில் நலனும், சீலமும் சத்தியமும் பெருகவும், தம் வாக்கைக் காக்கவும், யுகந்தோறும் தேவைக்கு ஏற்றபடி தம்மைத் தோற்றுவித்துக் கொள்கிறார். பகவான் இங்ஙனம் உலகில் நல்லவைகளையெல்லாம் பாதுகாக்கிறார். பக்தர்களின் உள்ளம்கவர் கள்வனாகிய பகவான் அப்போது அதிஆச்சரியமான அற்புதங்களையெல்லாம் நிகழ்த்துகிறார். யதுகுலதிலகமாய்ப் பகவான் இப்போது திருக்கோலம் கொண்டிருப்பதால் யதுகுலம் பெருமை மிக்க வம்சமாகிவிட்டது. அதன் புகழ் என்றென்றும் இப்பாருலகில் நிலைத்திருக்கும் ஓ, பிருந்தாவனமே! நீ எவ்வளவு பெரிய பாக்கியவதி. கண்ணன் திருவடிகள் பட்டமையால் அவன் உன் மேல் ஓடி விளையாடியமையால் உன் தூசியும் புழுதியும் புனிதமானவைகள் ஆகிவிட்டன. ஓ துவாரகையே! உன் புகழை யார்தான் சொல்ல முடியும்! துவாரகையைத் தன் சரீரத்தில் உடைத்திருப்பதால் ஓ பூமாதேவியே! நீ மிகப் பெரிய புண்ணியவதி ஆகிவிட்டாய். வைகுண்ட நாதன் இவ்வையகத்தின் மேல் எழுந்தருளியிருப்பதால் வைகுண்டமே சோபையற்று விளங்குகிறது. இவ்வையகம் எல்லா மங்களங்களும் நிறைந்து சீரும் சிறப்புமாக விளங்குகிறது. துவாரகாவாசிகள் எப்போதும் பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் சந்நிதியில் எந்தத் தாபமும் பயமுமற்றுக் கடவுளின் திருக்கோலம் கண்டுகொண்டே அவன் பாதுகாப்பில் நிர்ப்பயமாய் மகிழ்ச்சியாய் வாழ்கிறார்கள். பக்தர்களுக்கு எளியவனாய், சௌலப்யனாய், தீனபந்துவாய், பக்தர்களிடத்து பித்துக்கொண்டவனாய்ப் பகவான் இங்கு எழுந்தருளியுள்ளான். ஆனால் வைகுண்டத்திலோ பகவான் இவ்வளவு காட்சிக்கு எளியனாய் இருக்கமாட்டான். ஓ, பிருந்தாவனக் கோபியர்களே! நீங்கள் எல்லாரும் பூர்வ ஜன்மங்களில் செய்த எல்லாப் புண்ணிய பலன்களும் ஒன்று சேர்ந்து உங்களுக்கு இவ்வளவு பெரிய பாக்கியத்தை அருளியிருக்கின்றன. கண்ணன் திருக்கரங்களால் தீண்டப்படும் பாக்கியம், அவனுடைய பேரருளால் உங்களுக்குக் கிடைத்தது. உங்கள் பரிசுத்த அன்பினால் கண் குளிர, மனம் குளிர அவன் தாமரைத் திருவடிகளைத் தரிசிக்கவும் கண்டுகொண்டே இருக்கவும் நீங்கள் புண்ணியம் செய்திருக்கிறீர்கள். யுத்தகளத்தில் அவன் காட்டிய வீரம், சாமர்த்தியம் தான் எவ்வளவு ஆச்சரியமானது! சிசுபாலன் போன்ற மிக்க பலம் வாய்ந்த பேரரசர்களை அவன் எவ்வளவு எளிதில் வென்றான். எவ்வளவு பேர்களின் பலத்த எதிர்ப்பை எளிதில் சமாளித்து நம் பிரபு ருக்மணியைத் திருமணம் செய்து கொண்டான். அவள் பிரத்யும்னனைப் பெற்றெடுத்தாள். இதே போன்று சாம்பனின் தாயாகிய ஜாம்பவதியையும் அம்பாவின் தாயாகிய நக்னஜித்தையையும், சத்தியபாமாவையும் மற்றும் பல பக்தைகளையும் அவன் திருமணம் செய்துகொண்டான். மேலும் பௌமன் என்பவனைக் கொன்று ஆயிரக்கணக்கான பக்தைகளைப் பகவான் ஆட்கொண்டான். இப்பெண்பாலர் யாவரும் தங்கள் நடத்தையால் என்றும் ஆண்களைச் சார்ந்து வாழவேண்டிய, பலஹீனர்களாகிய பெண் இனத்துக்கே பெருமை தேடித்தந்தார்கள். ஏனென்றால் தாமரை போன்ற மலர்ந்த அழகிய கண்களை உடைய வாசுதேவன் அவர்களின் அன்புக்குக் கட்டுப்பட்டவனாய் அவர்களை விட்டுப் பிரியாமல் இருந்தார். அவர்களைத் திருப்திப்படுத்த வேண்டி தேவலோக மலராகிய பாரிஜாதத்தையும் அவன் தேடிக்கொண்டு வந்து தந்தான்.

குருகுல மாதர்களிடம் விடைபெற்றுக்கொண்டு அவர்களைவிட்டுச் சென்றபோது கண்ணன் அவர்கள் தன்னைப்பற்றி இங்ஙனம் பேசிக்கொண்டதைக் கேட்டான். கண்ணன் அன்புடன் அவர்களை நோக்கினான். பொருள்

சேர்ந்த புகழாகிய ஹிருதயத்தின் அடியி லிருந்து எழுந்த உண்மையான பக்தியோடு அவர்கள் கூறிய புகழ் மொழிகளை அவன் அங்கீகரித்துக்கொண்டான். குருகுல மாதர் தன்யர் ஆயினர். கண்ணனைப் பாதுகாப்பாக அனுப்பிவைக்கவும் மரியாதை செய்கிறமுறை யிலும் தர்மராஜா யுதிஷ்டிரன் சதுரங்க சேனை யையும் கிருஷ்ணனுடன் அனுப்பினன். பாண்டவர்கள் ஹஸ்தினபுரத்தைவிட்டு வெகு தூரம்வரையில் தன் பிரிவைச் சகிக்கமாட்டாத வர்களாய் உடன் வந்துகொண்டிருப்பதைப் பார்த்த கண்ணன் மனம் நெகிழ்ந்தது. அவர் களுக்கு மிக்க அன்புடன் ஆறுதல் கூறி அவர் களைத் திரும்பிப்போகும்படி சொன்னன். அவர் களும் அங்ஙனமே திரும்பினர்கள். கண்ணன் படிப்படியாக குருஜங்கள், பாஞ்சாலம், சுர சேன், ஜமுன், பிரமமவர்த்தம், குருக்ஷேத்திரம், மத்சயம், சாராவதம், மாரு, ஸ்வல்பதோயம் ஆகிய தேசங்களைக் கடந்து பிரயாணம் பண்ணினன். அந்தந்த தேசமக்கள் கண்ணனை வழிபட்டு மனமகிழ்ச்சியடைந்து சன்மானப் பொருள்களையெல்லாம் அன்புடன் காணிக்கை யாகச் செலுத்தினர்கள். இந்த நீண்ட பய ணத்தை இரவு பகல் என்று பாராது பகவான் தொடர்ந்தார். தேரை இழுத்த குதிரைகளும் களைப்பு அடையவே இல்லை. இங்ஙனம் அவர் தம் பயணத்தை இனிது முடித்துத் தம் சுதேச மாகிய அனர்த்தம் என்று சொல்லப்படுவதா கிய சௌவிர, அபிகிரா என்கிற இரண்டு தேசங்களின் மத்தியில் இருப்பதுமாகிய துவாரகைக்கு வந்து சேர்ந்தார்.

**அத்தியாயம் 11**

சூதர் சொன்னர்: முனிவர்களே துவாரகைக் குள் தம் ரதம் புகுந்ததுமே பகவான் பாஞ்ச ஜன்யம் என்னும் தம் சங்கை எடுத்து ஊதி னர். அந்தச் சங்குநாதத்தின் மூலம் துவாரகா வாசிகள் தங்கள் பிரபுவாகிய கண்மணி கண் ணன் வந்துவிட்டதை அறிந்து கொண்டார்கள். அவன் வரவு அவர்களின் ஹிருதய தாபங்களை எல்லாப போக்கி அவர்களுக்குப் பெருமகிழ்ச்சி ஊட்டியது. பவளம் போன்ற அவனது உதடு களும், கரும் சிவபபு வாய்ந்த அவனது கன்னங் களும், சங்கின் பால்போன்ற தூய வெண்நிறத் தில் பிரதிபலித்தன. அதன் அழகை என் னென்பது! செந்தாமரை போன்ற தன் திருக் கரங்களில் அவன் ஏந்தியிருந்த அந்த வெண் சங்கானது தாமரைக் குளத்தில் ஒரு அலர்ந்த செந்தாமரைமேல் அன்னப்பறவை வீற்றிருந் ததுபோல் இருந்தது. யுத்தகளத்தில் இதே சங்கினின்று எழுந்த பேரொலியானது உலகத் திற்கெல்லாம் பயமூட்டி வந்த கொடுங்கோ லானது உள்ளத்தில் பயத்தை உண்டாக்கி யது. துவாரகாவாசிகளோ இந்தப் பாஞ்ச ஜன்ய நாதத்தால் மனம் மகிழ்ந்து தங்கள் பிரபு வைப் பார்க்க ஓடோடி வந்தார்கள். வாசுதே வன் இப்பிரபஞ்சத்தின் ஆதிமூலம், ஆதிகார ணன். அவர் தம்மில்தாமே ஆத்ம திருப்தியுற்று இருக்கிறர். அவருக்கு அன்னியமாகப் பிரபஞ் சத்தில் ஏதும் இல்லை. பகவானுக்குப் பிரஜை கள் அன்புடன் படைத்த காணிக்கைகள் சூரிய னுக்குக் கற்பூர ஆரதி எடுப்பது போன்று இருந்தது.

குழந்தைகள் அம்மா அப்பா என்று முழுக்க உச்சரிக்கத் தெரியாவிட்டாலும் தம் தாய் தந்தையரை உணர்ச்சி ததும்பப் பேரன்புடன் அழைப்பதுபோன்று தங்களுடைய ரக்ஷகனும் உத்தம அரசனுகிய அப்பிரபுவிடம் ஆனந்தத் தால் மலர்ந்த முகத்துடன் உணர்ச்சி பொங்க குசலம் விசாரித்தார்கள், பேசினர்கள், அன்பு செலுத்தினர்கள், வணக்கம் செய்தார்கள். அவர்கள் சொன்னது: "ஓ பிரபு! எவரு டைய தாமரைத் திருவடிகளைத் தேவர்களின் அரசனுகிய இந்திரனும், பிரம்மதேவனும், சன காதி முனிவர்களும் அனுதினமும் வந்திக் கிறர்களோ அத்திருவடிகளுக்கு வணக்கம் செலுத்துகிறேம், பணிகிறேம். யார் இவ் வுலகில் சிரேயஸை நாடுகிறர்களோ அவர் களுக்குத் தங்களைத் தவிர வேறு கதி ஏது?புக லிடம் ஏது? தங்களிடம் எங்களை ஒப்படைக்கி றேம். இப்பிரபஞ்சத்தையும் அதன் அனைத்து உயிர்களையும் சிருஷ்டி கர்த்தாவையும் எடுத்து விழுங்கிவரும் காலதேவன்—மரணம் உங்கள் திருவடிகளைத் தஞ்சமெனப் பற்றினவர்களை ஒன்றும் செய்ய இயலாது சக்தியற்றதாகிறது. ஆகையால் பிரபு, உன் திருவடிகளை வணங்கு கிறேம்; சரணடைகிறேம். இப்பிரபஞ்சத்தில் அனைவராலும் அறிந்தோ அறியாமலோ வழுத் தப்படுபவன் நீயே எங்கள் பிரபு, அரசன்,

நண்பன், மாதா, பிதா, குரு, தெய்வம் எல்லாம் நீயே. எங்களுக்கும் எல்லா உயிர்களுக்கும் ஆதிமூலம், ஆதிகாரணன் நீயே. உன் விருப்பத்துக்கு, கட்டளைக்கு என்றும் எங்களை ஒப்படைக்கும்படியான நல்ல மனதை அருளியவன் நீயே. அதைக் குறித்து நாங்கள் பெரிதும் மகிழ்கிறோம். எங்கள் அனைவரையும் நீ யாண்டும் பாதுகாப்பாயாக. எங்களின் உயிரான அரசனுகிய உம் திருமுகத்தைச் சகல சௌபாக்கியங்களையும் குறிக்கும்படியான மங்களமான புன்முறுவலுடன் கூடியதாகத் தரிசிக்கக் கிடைத்த நாங்கள் பாக்கியவான்கள்.

ஓ தாமரைக் கண்ணு! உன்னைத் தரிசிப்பதை விட எங்களுக்கு வேறு என்ன புண்ணியம் வேண்டும்? நீ உன் உற்றார் உறவினரைப் பார்ப்பதற்காக மதுரா நகருக்கோ, ஹஸ்தினபுரத்துக்கோ போய்விட்டால் உன்னைப் பிரிந்திருக்கிற ஒவ்வொரு க்ஷணமும் ஒரு யுகம் போல் கழிக்க வேண்டியிருக்கிறது. நீ துவாரகையில் எழுந்தருளியில்லாதபோது, சூரிய அஸ்தமனம் இருளைக் கொண்டு வருவது போன்று, எங்கள் உள்ளத்தில் சோகத்தைக் கொண்டு வந்து விடுகிறது. ஆ! உன் கருணை விலாசம், திவ்யகடாக்ஷம், எல்லாத் தீமைகளையும் பஸ்பம் பண்ணவல்லது. ஆனந்தமானபரமாகிய, கருணைகரக் கடவுளாகிய, தெய்விக எழிலும், மனமோகனப் புன்னகையும் கூடிய எங்கள் ஆண்டவனே! பிரபோ! உம்மைக் காணுமல் நாங்கள் உயிர் வாழவே முடியாத நிலையில் தவிக்கிறோம்."

தன் அன்பான பிரஜைகள் இங்ஙனம் தன் மேல் அன்பையும் புகழையும் கொட்டியதைப் பார்த்து பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் புன்னகை பூத்தவராக அவர்களையெல்லாம் பார்த்தார். அவர்களது அன்பை ஏற்றுக்கொண்டார். தன் தலைநகருக்குள் பிரவேசித்தார். பாதாள லோகத்தில் பிரவகிக்கும் போகவதி நதியை எங்ஙனம் சர்ப்பங்கள் காத்து வருகின்றனவோ அங்ஙனம் துவாரகா நகரமும் இதுவரை மது, தசார்ஹா, அக்ரூரர், அந்தகர், விருஷ்ணிகள் ஆகியோரால் பாதுகாக்கப்பட்டு வந்தது. இவர்கள் யாவரும் கிருஷ்ணனுக்கு சமமான வல்லமை வாய்ந்தவர்கள். துவாரகாவின் இயற்கை அழகு மனதைக் கொள்ளை கொண்டுபோவதாய் இருந்தது. ஆறு ருதுக்களிலும் ஒன்று போல எல்லா ஸ்தாவரங்களும் பூத்தன. கனிவர்க்கங்கள் பலன் தந்தன. எங்கும் தாமரைக் குளங்களும், நறுமணம் நிறைந்த பூக்கள் மிக்க சிங்காரத் தோட்டங்களும், பூங்காவனங்களும், கனிவர்க்கங்கள் நிறைந்த அடர்ந்த மா பலாச் சோலைகளும், தென்னந் தோப்புகளும், நிழல் தரும் செழித்த விருக்ஷங்களும் அடர்ந்து காணப்பட்டன. ஸ்ரீ கிருஷ்ணனது வரவை முன்னிட்டு மகிழ்ச்சியடைந்த மக்கள் இந்த இயற்கை எழிலுடன் செயற்கை எழிலும் செய்து சோபிக்கச் செய்தார்கள். அழகான தோரணவாயில்கள் அமைத்தார்கள். பலநிறங்களில் பலவிதங்களில் கொடிகளைக் கட்டினர்கள். இந்த அலங்கார வேலைகளினல் சூரிய ஒளிகூட அந்நகருக்குள் பிரவேசிக்க முடியவில்லை. அகண்ட சாலைகளும், தெருக்களும், சதுக்கங்களும், நாற்சந்திகளும், கடைகளின் முன்புறங்களும், மிகவும் சுத்தமாகக் கூட்டப்பட்டு, தண்ணீர் தெளித்து கோலங்களிட்டு மங்களமாக அழகுபடுத்தப்பட்டன. மங்களம், புனிதம், தெய்வீகம் இவைகளின் அறிகுறியாக புஷ்பங்களும், அக்ஷதையும் தூவி வைத்திருந்தார்கள். ஒவ்வொரு வீட்டிலும் பாலும் வெண்ணையும், தான்யங்களும், கனி வர்க்கங்களும் கரும்பும் நிறைந்திருந்தன. ஒவ்வொரு வீட்டு வாசலிலும் பூரண கும்பமும் தீபமும் பத்தியும் பொருத்தி வைத்திருந்தார்கள்.

நீண்டகாலப் பிரிவிற்குப் பிறகு கண்ணன் இப்போது துவாரகைக்கு வந்து சேர்ந்ததை முன்னிட்டு வசுதேவர், அக்ரூரர், உக்ரசேனர் பலராமன், பிரத்யும்னன், சாருதேஷ்ணன், சாம்பன். ஆகியவர்களுக்கு அளவு கடந்த மகிழ்ச்சி உண்டாயிற்று. அவர்கள் தங்கள் அன்ன ஆகாராதிகளையும் மறந்து பட்டத்து யானையை அலங்கரித்து அதன்மேல் பூரண கும்பம் வைத்து அதைப் பின்பற்றி கண்ணனைக் காணத் தங்கள் ரதங்களில் வந்தார்கள். மங்கள வாத்தியங்களின் முழக்கமும் அந்தணர்கள் ஓதிய வேதங்களின்ஒலியும்இவ்விடத்தை தெய்வீகமாக மங்களமாக, புனிதமாக ஆக்கின. பேர் அன்பினல் துவாரகா வாசிகள் செய்த அனைத்தும் இறைவனுக்குச் செய்த வழிபாடு ஆயிற்று.

# கர்மம்

( சகோதரி நிவேதிதை )

இந்த மண்ணில் பிறப்பெடுத்த அவதார புருஷர்கள் எல்லாரும் கர்மம் செய்வது எப்படி என்பதுபற்றிச் சொல்லியிருக்கிறார்கள். இந்த அவதார புருஷர்களெல்லாரும் மனித குலத்திற்குத் தொண்டாற்ற அன்றி வேறு எதற்காக இங்கு வந்தார்கள்? மக்களுக்காகத் தம் உயிரைக் கொடுத்துப் பாடுபடுவதைவிட, பேரானந்தத்தில் திளைத்திருப்பது அவர்களுக்கு எவ்வளவோ எளிதாக இருந்திருக்கும்! அவர்களுக்கு எந்தக் காலத்தும் சம திருஷ்டியே வாய்த்திருந்தது. அப்படியிருந்தும் அத்வைத அனுபவத்தில் எப்போதும் மூழ்கியிருப்பதை விட்டுவிட்டு எதற்காகப் பேதங்கள் நிறைந்த இந்த உலகுக்கு வர வேண்டும்? பிரபஞ்ச அதீதத்தில் உணரப் படும் பேரானந்தத்தை எதற்காகத் துறக்க வேண்டும்? அவ்வப்போது ஏதோ சில வேளைகளில் கிடைக்கும் அந்த ஆனந்த அனுபவத்தோடு திருப்தியுற்றவராய் இங்கு எதற்காக வரவேண்டும்? எல்லாம் மனிதகுலத்தின் நலனுக்காகத்தான். தாம் பெற்ற இன்பத்தை மற்றவர்களும் பெற்றுத் தம் அருகில் வரட்டும் என்பதற்காகத்தான். தம்மிடமுள்ள அருட் செல்வத்தை வழங்கி மற்றவர்களையும் அருட் செல்வந்தர்கள் ஆக்குவதற்குத்தான். இப்படிப் பிறருக்கு அருட் செல்வத்தை வழங்குவதால் தாமே ஏழையாவதை அவர்கள் பொருட்படுத்தினர்களில்லை. இத்தகைய அவதார புருஷர்களின், தீர்க்க தரிசிகளின், வாழ்க்கைதான் எத்துணை அழகானது! சான்றோர்களின், ஆச்சாரியர்களின் கருணைதான் எத்துணை ஆச்சர்யமானது! இவர்கள் அருளுக்குப் பாத்திரர்களான நாம் எப்படி அந்த அருளுக்கு நம்மைத் தகுதியுடையவர்களாக்கிக்கொள்வது?

கர்மம் செய்வதன் மூலமாகவே அத் தகுதியை நாம் பெறமுடியும். எப்படிக் கர்மம் செய்ய வேண்டும்? கவலையற்று, பொறுப்பற்றுச் சுகமாக இருக்கவேண்டும் என்ற எண்ணத்தை விட்டுவிடுவதன் மூலம்; சலுகைகளையும், ஓய்வையும் எதிர்பார்க்கும் எண்ணத்தை நம்மிடமிருந்து உதறித் தள்ளுவதன் மூலம்; நம் மனதிலுள்ள அகங்காரத்தை விரட்டி ஓட்டுவதன்மூலம்; மற்றவர்களுக்காக உழைப்பதன் மூலம்; உயர்ந்த இலட்சியங்களுக்காகப் பாடுபடுவதன்மூலம் அவதாரபுருஷர்களிடமிருந்து நாம் பெற்ற கருணைக்குத் தகுதி உடையவர்கள் ஆவோம். பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் கீதையில் சொன்னது: ''பற்றுள்ளவராய்ப் பாமரர் கர்மம் செய்வது போன்று நாம் சுயநலப் பற்றில்லாராய்க் கர்மம் செய்யவேண்டும்.'' பொருட்பற்று மிக்க லோபி ஒருவன் எவ்வளவு தீவிரமாகப் பொருள் சேர்க்கப் பாடுபடுகிறானே அவ்வளவு தீவிரமாக நாமும் நம்முடைய இலட்சியத்திற்காகப் போராடவேண்டும். தண்ணீரில் மூழ்கிக்கொண்டிருக்கும் மனிதன் ஒருவன் எதையாவது பற்றிக்கொண்டு எப்படியாவது வெளியே வர முயல்வது போன்று நாமும் மற்றவர்களுடைய நலனுக்காக எந்தத்தியாகமும் செய்ய வேண்டும். உலகப் பற்றுள்ளவர்கள் தம்மைத் தாம் காப்பாற்றிக்கொண்டு சுயதேவைகளைப் பூர்த்திசெய்துகொள்வதில் எவ்வளவு சக்தியைச் செலவிடுகிறார்களோ அவ்வளவு சக்தியை நாமும் இலட்சியத்திற்காகச் செலவிட வேண்டும்.

உண்மையான துறவி தான் எடுத்துக் கொண்ட விரதங்களைக் காப்பதில் எத்துணைப் பெருங்கருத்துடையவனாக இருக்கின்றான்! அந்தப் பெருவிரதங்களினின்று நழுவி விடக் கூடாது என்பதில் எவ்வளவு ஜாக்கிரதையாக இருக்கிறான்! உண்மையானவனாய் நடந்துகொள்ளவேண்டும் என்பதற்காக என்னென்ன தியாகங்களையெல்லாம் செய்யத் தயாராய் இருக்கின்றான்! நாமும் அத்தகைய தீவிரமும் உண்மையும் உடையவர்களாக இருக்கவேண்டும். கர்மயோகி ஒருவன் கோழைத்தனத்தைத் தவிர்க்க வேண்டும். தன்னிடம் ஒப்படைக்கப்பட்ட செயலை நிறைவேற்றத் தவறக்கூடாது. நம்மிடம் ஒப்படைக்கப் பட்ட பொறுப்பை நாமும் நிறைவேற்றத் தவறக் கூடாது.

சிந்தனை, சொல், செயல் இவற்றில் ஏற்படும் ஒருமைப்பாட்டையே நம்முடைய இலட்சிய

மாகக் கொண்டிருக்கிறேமா? எல்லாவற்றிற்கும் மேலாக அந்த இலட்சியத்தை நிறைவேற்றுவதையே விரும்புகிறேமா? இப்படி நம்மை நாமே கேட்டுக்கொள்ள வேண்டும். அப்படிப்பட்ட பெரு விருப்பம் நமக்கு இருக்குமானல் விட்டுக்கொடுத்தல் என்பதற்கு இடமேது? ஆசைகள் நம் உள்ளத்தில் எழும்போதுதானே இரண்டையும் சமரசப் படுத்தும் முயற்சியில் ஒன்றிற்காகமற்றென்றை விட்டுக்கொடுக்க வேண்டும். இலட்சியத்தை நிறைவேற்றுதல் என்னும் ஒரே ஒரு ஆசை இருக்குமானல் விட்டுக் கொடுத்தல், சமரசப் படுத்துதல் என்ற பேச்சுக்கு என்ன தேவை? இலட்சியத்தை அரைகுறையாகப் பின்பற்றுதல், அதைப்பற்றிப் பேசுவதோடு நின்றுவிடுதல், இலட்சியத்தை நிறைவேற்றுவதில் உறுதி இல்லாதிருத்தல், இலட்சியத்திற்கு மாறுபட்ட ஆசையையும் மனதில்கொண்டு ஆசையை நிறைவேற்றிக்கொள்வதா, இலட்சியத்திற்காகப் போராடுவதா என்று குழம்பித் தவித்தல் ஆகியவை நமக்கு வேண்டாம். நம்முடைய வாழ்க்கையைத் துரும்பாக மதித்துக் கைம்மாறு கருதாமல் இலட்சியத்திற்காகத் தியாகம் செய்வோம். இன்னும் ஐம்பது பிறவிகள் கிடைக்குமானல் அவற்றையும் மகிழ்ச்சியோடு வழங்குவோம்.

நம்முடைய கடமையை உண்மையாகச் செய்வோம். நமக்குக் கொடுக்கப்பட்ட கடமைதான் நம்முடைய ஸ்வதர்மம். "நன்கியற்றும் பரதர்மத்தை விடக் குணமில்லா ஸ்வதர்மமே மேல்" என்பது கண்ணன் வாக்கு. "நான் சந்திக்க வேண்டியிருக்கின்ற இந்தச் சோதனை பயமுறுத்துவதாக இருக்கிறது. எனக்குச் செய்வதற்கு மிகக் கடினமானதாக எது இருக்க முடியுமோ அதுவே என் கடமையாக அமைந்திருக்கிறது. எதற்கு அப்பால் என்ன இருக்கிறதென்றுபார்க்கக்கூட நான் அஞ்சுவேனே அதுதான் என் முன் நிற்கின்றது. ஆனல் இருளாக இருந்து என்னைப் பயமுறுத்தும் அதில் தான் அன்னை பராசக்தி தன்னை மறைத்துக் கொண்டிருக்கிறுள். அதில்தான் பயங்கரமான என் காளியை நான் காணமுடியும்! அங்கே நான் மரணத்தையும் தழுவிக் கொள்வேன்" என்று ஒருவன் உறுதியோடு உரைக்க வேண்டும்.

"தர்மத்தைக் கடைப்பிடிப்பவனுக்குக் கழுமரம்; அதர்மத்தில் செல்பவனுக்கு அரியணையா!" என்று குமுறுகிறர் புலவரொருவர். இதற்கு விடையையும் அவரே அளிக்கின்றர்.

"அறநெறியாளன் உயிரை வாங்கிய அந்தக் கழுமரமே எதிர்காலத்தை ஆளுகின்றது; இன்னதென்று நாம் அறியாத இருளின் பின் இருந்து கொண்டு இறைவன் தனக்காகத் தியாகம் செய்கின்ற தன்குழந்தைகளைக் காத்து வருகின்றான்." அஞ்சாமை, வீரம், தன்னை வெல்லுதல் என்ற இந்தக் கொள்கையானது ஆழ்ந்த நம்பிக்கையோடு ஏற்றுக் கொண்டு செயலில்காட்டவேண்டிய பெருஞ் செய்திதான். எம்முன் மறைந்திருக்கும் தெய்வீகப்பேராற்றலே,நீ எழுந்திருப்பாயாக! உன் அருளால் எதுவும் எங்களுக்குச் சாத்தியமாகும். உன்னருளால் வெற்றியையும் தோல்வியையும் சமமாகக் கொண்டு நாங்கள் போராட்டத்தில் குதிப்போம்!

ஆனல் இலட்சிய வாழ்க்கை என்னும் இந்தப் போராட்டத்தை நாம் எப்படி நடத்துவது? கர்மத்தின் மூலமாகவே அதைச் செய்யவேண்டும். கர்ம பூமியாகிய இவ்வுலகில் நமக்கேற்பட்ட கடமைதான் ஆத்ம சாதனம். இந்த ஆத்ம சாதனத்தைப் பயிலுவதன் மூலமாகத்தான் நாம் பண்பை, சீலத்தைப் பெறுகிறேம். இவ்வாறு நாம் அடைந்த பண்பாடே நம்மை நாளடைவில் நிர்விகல்ப சமாதிக்கு உயர்த்திச் செல்கிறது. நிர்விகல்ப சமாதி எவ்வளவு உயர்ந்த நிலை! கர்மம் புரியும் ஒருவன் அதை எப்படி அடைய முடியும்? என்று நினைக்கலாம். கர்மத்தை முறையாகச் செய்வதால் வருவது பண்பாடு. தன்னடக்கம்தான் பண்பாடு ஆகும். இந்தத் தன்னடக்கம் என்பது தன்னை ஒரு குறிப்பிட்ட பாதையிலே செலுத்துவது; வேறு ஒன்றையும் நினையாதிருக்கச் செய்வது. இவ்வாறு தன்னை ஒழுங்குபடுத்துவது என்பது மனம் ஒருமுகப்படுவதால் வரும். மன ஒருமைப்பாடு உச்சநிலைக்கு வரும்போது சமாதி அடையப்படுகிறது. கர்மயோகத்திலிருந்து பூரண நிலையாகிய முக்தி கிட்டுகிறது. எனவே நாம் கர்மத்தை யோகமாகச் செய்து முக்தியடைவோமாக. முக்திதான் வாழ்வின் குறிக்கோள்.

---

# மகிஷாசுரமர்த்தனி

( சிறு தொடர் கதை )

( சிவத்தொண்டன் )

[ 358ஆம் பக்கத் தொடர்ச்சி ]

திக்கன் மலையரசியைப் பிடித்திருந்த பிடி தளர்ந்தது. தன் கையைக் கஷ்டப்பட்டு அவன் பிடியிலிருந்து விடுவித்துக் கொண்டாள் மலையரசி. "உன் தலையில் இடிதான் விழப்போகிறது" என்று அவள் சபித்தாளோ இல்லையோ, யாரோ தேவதைகள் அவள் பேச்சைக்கேட்டுக் கொண்டிருந்து விட்டு அதைநிரூபிக்க விரும்பியதேபோன்று, பக்கத்திலிருந்த மலபார் நாட்டுத் தென்னைமரத்திலிருந்து ஒருபெரிய இளநீர்க் காய் நேராக அவன் மண்டையின் மீது வந்து விழுந்தது. "ஐயோ, ஐயோ" என்று வலியால் அலறினன் திக்கன். அவன் மகிஷகுணமே உருவானவன். அவனைத் தடுத்தாட்கொள்ளத் திருவுளம் கொண்டாள் மர்த்தனியாகிய சர்வேஸ்வரி. அதனல்தான் இந்த அதிசயம் அப்பொழுது நிகழ்ந்தது. அந்தநேரத்தில் கூட அவனுக்கு ஆண்டவனின் நினைப்பு வராததைப் பார்த்துப் பரிதாபம் கொண்டாள் மலையரசி. தன் முன்றானையைக் கிழித்து அவன் மண்டையில் கட்டுப்போட்டாள். என்ன செய்தும் இரத்தப் போக்கு நிற்கவில்லை.

அவனுடைய நண்பர்கள் இந்தத் திடீர் திருப்பத்தைப் பார்த்துப் பிரமித்துப் போய் நின்றனர். தங்களுடைய மோட்டார் சைக்கிளில் நண்பனை ஏற்றிவைத்துக்கொண்டு வாயு வேகத்தில் பறந்தனர் மருத்துவ விடுதிக்கு. அப்பொழுது இவர்களைப் போலவே ஒரு பொறுப்பில்லாத ஓட்டுநன் கல்மண் தெரியாது தன் ஆட்டோ ரிக்ஷாவைப் போக்குவரத்து விதிகளைமீறி ஓட்டி வந்தவன் இவர்கள் மீது மோதிப் பிறகு வண்டியை நிறுத்தினன். 'பட்ட காலிலேயே படும்' என்பது போல, வண்டியிலிருந்து தூக்கி எறியப்பட்டுக் கீழே விழுந்த திக்கன் மீது இன்னொரு வண்டியின் சக்கரம் ஏறித் தாண்டிச் சென்றது. முட்டி எலும்பு உடைந்து அக்கணமே மயக்கமடைந்தான் திக்கன். பாவம், அவன் உடல் நிலை தேறுவதற்கு எட்டுமாதங்கள் பிடித்தன. அவனல் முன்புபோல் நிமிர்ந்து நேராக நடக்க இயலவில்லை. மிகவும் மெதுவாக ஓர் ஊன்று கோலை வைத்துக்கொண்டு நடந்தான். அவனுக்குச் செயற்கைக் கால் பொருத்திய பிறகு தான் அவனிடமிருந்த செயற்கைத் தன்மைகள் எல்லாம் ஒழிந்துபோய்ச் சிறிது சிறிதாக மனிதனக மாறத் தொடங்கினன் திக்கன்.

திக்கன் வந்து தன்னை வருத்தியதைப் பெரிதாக எடுத்துக்கொள்ளவில்லை மலையரசி. மான்கள் வனத்தில் உலாவும் வரை அவற்றை அடித்துத் தின்பதற்குக் காட்டு நாய்களும், ஓநாய்களும் பின்தொடர்வது தவிர்க்க முடியாதது தானே? இதில் அவரவர்களுடைய நடத்தைக்குத் தக்கபடி இறைவன் இரட்சிக்கவோ, சிக்ஷிக்கவோ செய்கிருன். ஆனல் தனக்கு எது கிடைத்தாலும் அதற்குத்தெய்வம் பொறுப்பு அன்று; தானே தான் தனக்கு முழு அதிகாரி என்பதை மனிதன் புரிந்துகொண்டு விட்டால் எத்தனையோ வேதனைகளும், அவலங்களும்குறையுமே என்று எண்ணிப்பார்த்தாள் மலையரசி. அன்று மாலை கல்லூரி முடிந்ததும் செந்திரு தன் உயிர்த்தோழியுடன் அவள் வீட்டுக்குச் சென்ருள். சிற்றுண்டி உண்ணும் போது நடந்ததையெல்லாம் வீட்டில் சொன்னர்கள். 'கலி காலத்தில் தலைமேல் பலன்' என்று முணுமுணுத்தான் ஆத்மன். அன்ருேடு அந்த நிகழ்ச்சியை மறந்துவிட்டார்கள்.

சிவனடி இதைப்பற்றி அறிந்தபோது 'தெய்வம் நின்றுகொல்லும்' என்பார்களே, இப்பொழுது என்ன, 'இராமன் வில்லை எடுத்தது கண்டனர், இற்றது கேட்டனர்' என்னும் ரீதியில் நிகழ்ச்சிகள் நடக்கின்றனவே என்று வியப்பில் ஆழ்ந்துபோனர். பரம்பொருள் அவதார மூர்த்தியாக அந்தக் குடும்பத்தில் வந்து பிறக்கப்போகிறது என்ற இரகசியம் அப்பொழுது அவருக்குத் தெரியாது அல்லவா?

தம் அறையில் அமர்ந்து 'அருட்பா' படித்துக்கொண்டிருந்தார் சிவனடி. அப்பொழுது விறுவிறு என்று அங்கே வந்தான் குணசீலன். "என்னை மன்னியுங்கள் அப்பா, நீங்கள் என்னசொன்னலும் சரி, இந்த இராட்சசி

யுடன் என்னால் குடும்பம் நடத்தமுடியாது" என்று பொரிந்து தள்ளினன். தற்செயலாக அந்தப் பக்கம் வந்த சிவனடியின் வாழ்க்கைத் துணைவி அறம் வளர்த்த நாயகி இதைக் கேட்டுத் துணுக்குற்றுத் திரும்பினர். அவர் உள்ளமோ தம் அறுபது வருடப் பழக்கத்தை நிறுத்தாமல் அந்தக் கணத்திலும் "முருகா, முருகா" என்று வழித்துணையை அழைத்துக் கொண்டிருந்தது. அவர் விழிகள் கணவரையே நோக்கின.

வாழ்க்கையில் தாம் அனுபவிப்பவைகள் அனைத்தும் இறைவன் தரும் வரமே என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கை உடையவர் சிவனடி. நண்பர்களும், உறவினர்களும் அவருடைய சாதனைகளைக் குறித்துப் பாராட்டும் போது 'அனைத்தும் அவள் அளித்தது; இதனை ஒரு கணத்தில் அழிக்கவும் அவள் வல்லாள்' என்று அடக்கமாகப் பதிலிறுப்பார். பராசக்தியைக் குறித்தே அவர் இவ்விதம் பகன்ருராயினும் தமது வாழ்க்கைத் துணைவிக்கும் இது பொருந்தும் என்பதை அவர் அறிந்திருந்தார். எந்த ஒரு குடும்பமும் வாழ்வதும் வீழ்வதும் அந்த இல்லத்தரசியின் கையில்தான் இருக்கிறது. அவளுடைய தகுதி, தரம், திறன் இவைதாம் அதை நிர்ணயிக்கும் என்பதை நன்கு உணர்ந்தவர் சிவனடி. ஆகவே தமக்கு மிகவும் பொருத்தமாக வந்து அமைந்த மனைவியைத் தம் தாய் தந்தையருக்கு நிகரான துணையாக எண்ணி மதித்து வந்தார்.

ஊரே போற்றும் சிவனடி தம் கண்ணில் வைத்து இமைக்குள் பொத்தும் அளவுக்குத் தகுதி படைத்தவர்தாம் அறம் வளர்த்த நாயகி. பொறுமையே தனக்குப் பெருமை, புன்னகையே சிறந்த பொன்னகை, கணவரின் மலர்ந்த முகமே தன்னுடைய நிரந்தரமான சொத்து என்றெல்லாம் தீர்மானமான கருத்துக்களை உடையவர் அந்த அம்மையார். தம் உழைப்பையே மூலதனமாக வைத்து அவர் அந்தக் குடும்பத்தை விருத்தி செய்திருந்தார். இன்று இந்தக் குடும்பத்தில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையில் சிறந்து விளங்கினர்கள். முதல் பிள்ளை கானடா தேசத்தில் புகழ் படைத்த தொழிலதிபர்; இரண்டாம் மாப்பிள்ளை மேற்கு ஜெர்மனியில் அரசாங்கமும் மதித்துப் போற்றும் தேர்ந்த விஞ்ஞானி என்று இவ்விதம் பட்டியல் நீண்டு கொண்டே போகும். இந்த ஆற்றலுக்கெல்லாம் அடிப்படையாய் அமைந்தது நாயகியின் நேரடியான கவனிப்பும், கண்டிப்புக் கலந்த அரவணைப்புமே. காலை நாலு மணிக்குத் துயிலெழுந்து தம் காரியங்களைக் கவனிக்கத் தொடங்கினல், இரவு பதினெரு மணிவரை வேலை சக்கையாய்ப் பிழிந்தெடுக்கும். வீட்டில் வேலைக்காரர்கள் இருந்தார்கள்; இருப்பினும் அவர்களைத் தக்கபடி வேலை வாங்குவதே ஒரு பெரிய வேலை அல்லவா! அந்தக் கலையில் கைதேர்ந்தவர் நாயகி. பணியாளர்கள் முகம் கோணுமலும், அதே சமயம் அவர்கள் சோம்பித்திரியாமலும் கச்சிதமாகக் காரியங்களைச் செய்யக் கற்றுக் கொடுத்திருந்தார் அந்த மாதரசி. அவரை அறிந்தவர்கள், தெரிந்தவர்கள் யாவராயினும் சரி, தெய்வீகக்களை பொருந்திய அந்த முகத்தைப் பார்த்ததுமே தங்கள் களைப்பும், சோர்வும் நீங்கிப் புத்துணர்வு பெற்றவர்களாய்ச் சுறுசுறுப்புடன் இயங்கத் தொடங்கி விடுவார்கள். அவ்விதமிருக்க இன்று அவர் மகனே வாடிய முகத்துடன் அவர் எதிரே நின்றுகொண்டிருந்தான்.

குணசீலன் தன் பெயருக்கு ஏற்பக் குணத்திலும் பண்பிலும் அப்பழுக்கு இல்லாதவன். தான் அழிந்தாலும் சரி, தன்னைச் சார்ந்தவர்கள் துன்புறக்கூடாது என்ற கொள்கையை உடையவன். எத்தனையோ பிறவிகளில் தான் செய்த புண்ணியங்களின் பயனுய்த் தனக்கு வாய்த்த பெற்றோர்களிடம் நற்பெயர் எடுப்பது ஒன்றே தன் பிறவியின் பயனுய்க் கருதி வாழ்ந்து வந்தான். இன்று துணைவியாக வந்தவளே துன்பத்தைக் கொடுப்பவளாக ஆகி இருப்பது அவன் உள்ளத்தை மிகவும் வருத்தியது.

குணசீலனுடைய படிப்புக்கும், செல்வ வளத்துக்கும் இணையானவள்தான் அவனுடைய மனைவி சித்ரா. ஆனல் வாழ்க்கைத் தரத்தில் இருவரும் இருவேறு முனைகளில் இருந்தார்கள். தன் உடல் வலிமையைக் கண்டு பிறர் நடுங்கவேண்டும் என்று ஒருக்காலும் நினையாதவன் குணசீலன். தான் சலிப்பின்றிப் பிறருக்குத் தொண்டு செய்வ

தற்கு வலிமை மிக்க உடல் அவசியம் என்று தான் அவன் கருதினன். சித்ராவோ தன் உடல் வனப்பைப் பார்த்துப் பிறர் தனக்கு அடங்கிப் போகவேண்டும்; தன் பேச்சுக்கு எதிர்ப் பேச்சுப் பேசக்கூடாது என்று எண்ணினள். அவளுடைய சொல்லிலும், செயலிலும் தான் படித்தவள், அழகானவள், உயர்குடும்பத்தவள் என்ற அகம்பாவம் ததும்பி நிற்கும். அளவுக்கு மீறிச் செல்லம் கொடுத்து வளர்க்கப்பட்டவள் ஆதலால் புகுந்த வீட்டிலும் அதே தோரணையோடு நடக்க முற்பட்டாள். தன் மாமியாரும், நாத்திகளும் கடுமையாக உழைத்து விட்டுக்காரியங்களை நிறைவேற்றிக் கொண்டிருக்க, இவள்மட்டும் எப்போதும் தன்னை அலங்கரித்துக்கொள்வதிலும், ஆங்கிலத்தில் விலையுயர்ந்த ஆனல் மட்டமான கதைப் புத்தகங்கள் படிப்பதிலும், தன் தோழிகளுடன் தொலைபேசியில் அரட்டை அடிப்பதிலுமாகப் பொழுதைப் போக்கினள்.

குணசீலன் ஆரம்பத்தில் 'இவள் அறியாதவள்; காலப் போக்கில் திருந்துவாள்' என்று நம்பியிருந்தான். ஆனல் நாள் செல்லச்செல்ல அவளுடைய போக்கு மிகவும் விபரீதமாகப் போயிற்று. தான் இரண்டு குழந்தைகளுக்குத் தாய் என்பதையும் மறந்தவளாக மிகவும் பொறுப்பற்ற முறையில் நடக்கத் தலைப்பட்டாள். அவளைப் பார்த்து அவளுடைய குழந்தைகளும் பூஜை, புனஸ்காரங்களில் அலட்சியம் காட்டத் துணிந்தனர். தமிழ் வேதங்களைப் பாராயணம் செய்வதையும் நிறுத்திக்கொண்டனர். தாயில்லாப் பெண் என்று ஆரம்பத்தில் பரிவுகாட்டிய நாயகியே இப்பொழுது சற்றுக் கடுமைகாட்ட நேர்ந்தது. அன்றாட அலுவல்களில் உழன்று பொழுது இல்லாமல் தவிக்கும் தம்கணவரிடம் இதுபோன்ற பிரச்னைகளை எல்லாம் சொல்லி அவரை அல்லற்படுத்துவதில்லை அவர். இது தம்முடைய பொறுப்பு, தாமே இதைச் சரிசெய்ய இயலும் என்றே நம்பினர். ஆனல் சித்ராவோ தன் மாமியார் அளவுக்கு மீறித் தன் விஷயங்களில் தலையிடுவதாகக் கணவனிடம் புகார் கூறலானள். தன் மாமனரிடமே இது பற்றிப் பேசப் போவதாக அவள் கூறியதும கோபத்தில் தன்னையே மறந்துவிட்டான் குணசீலன். அவளைக் கடுமையாக வைது தன்னுடைய தாயார் அவளுக்கும் அன்னை தான் என்று புத்திபுகட்டிவிட்டு அலுவலகத்துக்குக் கிளம்பிச் சென்ருன்.

நாட்டிலேயே மிகப்பெரிய கம்ப்யூட்டர் கம்பெனிகளில் ஒன்றுதான் அவன் பணிபுரிந்த நிறுவனமும். அதில் தொழில் நிபுணர்களின் குழுவுக்கு அவன் தலைவனக இருந்தான். அவனுடைய தொழில் திறமை காரணமாக அவன் நிறுவனம் வருடந்தோறும் அதிகக் கிளைகளை நிறுவி அதிக லாபம் பெற்று வந்தது. போட்டி நிறுவனத்தார் அவனுக்கு இருமடங்கு ஊதியம், சட்டத்துக்குப் புறம்பான பலவகை வசதிகள், தங்கள் நிறுவனத்தில் பங்கு என்றெல்லாம் கொடுப்பதாக ஆசை வார்த்தைகள் கூறி அழைத்தனர். ஆனல் குணசீலன் தான் தற்போது இருக்கும் நிறுவனத்தில் பெரும்பாலோர் மிகவும் நல்லவர்கள், நாணயமும், நேர்மையும் உடையவர்கள், அவர்களுடன் பணியாற்றும்போது தனக்கு ஆத்மீகத் திருப்தி உண்டாகிறது என்று கூறி வெளி ஊர்களுக்குச் செல்ல மறுத்துவிட்டான்.

சித்ராவுக்கு இது கடுங்கோபத்தை உண்டாக்கியது. தன் கணவன் இவ்வளவு நிபுணனக இருந்தும், இப்படி ஒரு பத்தாம்பசலியாகவா இருக்கவேண்டும் என்று சலித்துக் கொண்டாள். வேறு ஊரில் வேலை ஒப்புக் கொண்டால் வருவாயும் அதிகரிக்கும், தானும் சுதந்திரமாய் வாழலாம் என்று எண்ணினள். வருவாய் அதிகரித்தால் செலவுதான் அதிகமாகும்; மன மகிழ்ச்சி என்பது பணம்காசில் இல்லை என்பதை அந்தப் பேதைப்பெண் புரிந்துகொள்ளவில்லை.

இந்த நிலைமையில் தன் குழந்தைகளை உள்ளூரில் மேல்நாட்டுப் பாணியில் அமைந்த ஓர் ஐந்து நட்சத்திர ஓட்டலுக்கு அடிக்கடி அழைத்துச் சென்ருள் சித்ரா. அங்கே அவளைப் போலவே குழந்தைகளும் ஆண் பெண் வித்தியாசமில்லாமல் நடனமாடவும், கும்பலாகக் கூடி இசை என்ற பெயரில் இரைச்சல் போடவும், ஒருவரைப் பற்றி மற்றவரிடம் வம்பு பேசவும், அவரை நேரே கண்டால் முகமன் கூறி 'இந்திரன், சந்திரன்' என்று கொண்டாடவும் கற்றுக் கொண்டனர். சுருங்கச் சொன்னல் எந்த வித லாபமுமில்லாமல் நிறையச் செலவு

செய்வதற்குக் கற்றுக் கொண்டனர் சிவனடி யின் அந்தப் பேரனும், பேத்தியும். தாங்கள் பேசுவதுதான் ஆங்கிலம், தாங்களே அதி மேதாவிகள், தங்களுக்குத் தெரியாதது எது வும் இல்லை; இனித் தங்களுக்குத் தெரிய வேண்டிய அவசியமும் இல்லை என்ற திமிரான எண்ணம் அவர்களிடத்தில் குடிகொண்டது.

வேலைப்பளு காரணமாக நுணுக்கமாகக் குடும்பத்தில் கவனம் செலுத்தாதிருந்த குண சீலனுக்கு ஒரு நாள் அடிவயிற்றில் அனல் மூண்ட நிலை ஏற்பட்டது. பெரிய வயது பெண்ணைப்போன்று நன்கு வளர்ச்சி அடைந்து விட்டிருந்த தன் பெண் சவிதா ஒரு மாத்திரை யைத் தன் வாயில் போட்டுக் கொண்டிருப் பதைக் கண்டான். அந்த உறையைப் பார்த் ததுமே அது மயக்கத்தை விளைவிக்கும் ஒரு வஸ்து; கடைகளில் கள்ளத்தனமாய் விற்கப் படுவது என்று புரிந்து போயிற்று அவனுக்கு. இந்தப் போதை மருந்தை ஒரு முறை உட் கொண்டால் போதும்; ஆயுளுக்கும் அதிலி ருந்து மீளமுடியாது; பிறரை அடிமை கொள் வதில் அதன் வல்லமை அத்தகையது என் பதை உணர்ந்திருந்த குணசீலன் பதறிப் போய்த் தன் மகளை உடனே டாக்டரிடம் அழைத்துச் சென்றான். வைத்தியர் சிகிச்சை களைச் செய்து முடித்துவிட்டு ஒரு தேர்ந்த மன இயல்பு நிபுணரிடமும் அவளை அழைத்துச் செல்லுமாறு கூறினார். நிபுணர் அவளை நன் ருகச் சோதித்துப் பார்த்துவிட்டு அவள் வசிக் கின்ற சூழலை உடனே அடியோடு மாற்றினால், அவள் திருந்தக்கூடும் என்று அபிப்பிராயப் பட்டார். தன் பெண்ணை வீட்டில் கொண்டு சேர்த்த குணசீலன் நேராகத் தன் தந்தை யிடம் வந்து படபடத்ததைத்தான் ஆரம்பத் தில் நாம் கண்டோம்.

எந்தச் சூழலிலும் தன் நிதானத்தை இழக் காதவர் சிவனடி. அந்தக் கணத்தில் நீதி தேவனாகிய யமதர்மராஜன் அவர் முன்னே தோன்றி "உங்கள் ஆயுள் முடிந்தது; கிளம்பு கிறீர்களா?" என்று கேட்டால் "அப்படியா! சரி வாருங்கள் போவோம்" என்று பதட்டப் படாமல் பதில் கூறுமளவுக்கு மனத்தெம்பு பெற்றிருந்தார். ஆகவே இப்போது குண சீலனின் கடுகடுப்பைப் பார்த்து அவர் கலங்கிப் போகவில்லை. "சிவே" என்று தம் மனை வியை அழைத்துப் பழக்கப்பட்டிருந்த அவர் இப்பொழுதும் அதேபெயரில் அவரை விளித்து "இது என்ன குழப்பம்? எதனால் வந்தது?" என்று கேட்டார்.

நாயகி "என்ன குணா? என்ன நடந்தது? சித்ராவிடம் இன்றைக்கும் சண்டையா?" என்று கேட்டார். குணசீலனின் கண்கள் கலங்கின. "அம்மா, புலியைப் பார்த்துப் பூனை சூடு போட்டுக் கொண்டதைப் போன்று மேல் நாடுகளில் நாம் தெரிந்து கொள்ளவேண் டிய உத்தமமான விஷயங்கள் எவ்வளவோ இருக்க இந்த விஷத்தைத்தானா இவள் குடிக்கவேண்டும்?" என்று முறையிட்டான். "குணா! என்ன சொல்கிறாய் நீ? எதையும் மறைக்காமல் விவரமாகச் சொல்" என்றார் நாயகி. "அம்மா, மேல் நாடுகளில் ஒழுக்கம் தவறிய சில பெற்றோர்களுக்குத் தம் குழந்தை களைக் கட்டுப்பாடான வாழ்க்கையில் நடத்திச் செல்வதற்குத் திறமையும், தகுதியும், தைரிய மும் இருப்பதில்லை. ஆகவே மேம் போக்காக 'எங்கள் குழந்தைகள் சொந்தக்காலில் நிற்கின் றன. அவர்களுக்குச் சகல சுதந்திரங்களும் கொடுத்திருக்கிறோம்' என்று கூறி விட்டுத் தங்கள் பொறுப்பைத் தட்டிக் கழித்துவிடு வார்கள். இங்கேயும் அப்படித்தான் நடந்திருக் கிறது" என்று கூறிக் கலக்கத்துடன் பெரு மூச்சு விட்டான் குணசீலன்.

சிவனடியின் நுண்ணறிவுக்கு என்ன நடந் திருக்கும் என்பது ஒருவாறு புலப்பட்டது. "சிவே! சவிதாவையும், கிஷோரையும் கூப் பிடு" என்றார். நாயகி சொல்லியனுப்பியதும் உடனே தாத்தாவின் அறைக்கு வந்து சேர்ந் தார்கள் இருவரும். விசாலமான அறையில் சில்லென்ற காற்று இதமாக வீசிக்கொண்டிருந் தது. ஆனால் அந்த இருவருக்கும் மட்டும் அங்கே மிகவும் புழுக்கமாக இருந்தது. "கிஷோர், என்ன, ஒழுங்காகப் படித்துக் கொண்டு வருகிறாயா?" என்று பேரனை முத லில் கேட்டார். தான் அந்த மாதத்தில் நடந்த தேர்வுகளில் இரண்டினை எழுதவேயில்லை; மற்றவற்றில் இருபதுக்கும் குறைவான மதிப் பெண்ணே பெற்றிருக்கிறான் என்ற விவரத்தை எப்படிச் சொல்வது என்று தயங்கினான்

கிஷோர். அவனுடைய கண்கள் ஒளி மங்கிக் காணப்பட்டன. நிற்கமுடியாமல் கால்கள் படபடத்தன. "உம், சரி! நீ சரியாகப் படிக்க வில்லை என்பது புரிந்துபோயிற்று. உனக்குப் பிடிக்காவிட்டால் படிக்கப் போகவேண்டாம். வேண்டுமானல் நம் தொழிற்சாலைக்குப் போய் வேலை பழகிக்கொள். ஆனல் அங்கே கடைநிலைத் தொழிலாளியாகத்தான் நீ சேரமுடியும். என்ன சொல்கிருய்?" என்று உரத்த குரலில் அவர் கேட்ட கேள்வி கிஷோரைத் தூக்கி வாரிப் போட வைத்தது. விஷயம் இவ்வளவு விரைவில் இந்த அளவுக்குத் திரும்பி விடும் என்று எதிர்பார்க்கவில்லை ஆதலால் அவன் மலைத்துப்போய் நின்ருன். "பதில் சொல்லடா. பேசாமல் நின்ருல் என்ன அர்த்தம்?" என்று கோபித்தான் குணசீலன். "இனிமேல் நான் ஒழுங்காகப் படிக்கிறேன். தாத்தா, என்னை மன்னித்து விடுங்கள்" என்று கிஷோர் முணுமுணுத்தான். ஆனல் மனதிற்குள் தன் அம்மாவிடமும், நண்பர்களிடமும் போய்ப் பேசிப் பார்க்கலாம்; தனக்குப் புதுவிதமான யோசனை சொல்லித் தருவார்கள் என்று எண்ணிக் கொண்டான். சிவனடி "குணு, தினமும் இரண்டு மணிநேரம் இனிமேல் அவன் படிப்புக்காக நீ செலவிட வேண்டும். அடுத்த மாதம் முன்னேருவிட்டால் அவனை நம் பழத்தோட்டத்தில் காளியப்பனிடம் பயிற்சிக்கு அனுப்பி விடு. விவசாயமும் உயர்ந்த தொழில் தான் என்பதைப் பையன் புரிந்து கொள்ளட்டும். சரி. நீ போய்ப்படி" என்று கூறி அவனை அனுப்பி வைத்தார். பிறகு தம் பேத்தியை அருகே வருமாறு அழைத்தார். அவளால் வர இயலவில்லை. நாயகியின் கண்களில் இலேசாக நீர் திரையிட்டது. தன்னுடைய தாய்ப் பாசமே இப்பொழுது தன் பலவீனத்திற்குக் காரணம் என்பதை அவர் உணர்ந்தார்.

இத்தனை நேரம் தன்னை அடக்கிக்கொண்டிருந்த குணசீலன் இப்பொழுது தன்னை மறந்து "மயக்க மருந்து சாப்பிடுகிருள் அப்பா, உங்கள் பேத்தி" என்று கத்திவிட்டான். ஒரே கணத்தில் தம்மைச் சுதாரித்துக்கொண்டார் சிவனடி. தங்கள் காலடியில் பூமி ஒன்றும் பிளந்துவிடவில்லை என்று தெரிந்துகொண்டனர் அந்த ஆதர்ச தம்பதியர். அந்தப் பெண்ணை இப்பொழுது கண்டித்தால் நிலைமை இன்னும் மோசமாகும்; அவளை அடித்துத் திருத்த நினைத்தால் முறிந்துபோவாள் என்று இருவரும் தெரிந்துகொண்டிருந்தனர். நாயகி தம் பக்கத்து மேசையிலிருந்த தட்டிலிருந்து திராட்சைப் பழங்களை எடுத்து ஒவ்வொன்ருகக் கொடுத்து அவளை உண்ணச் செய்தார். சிவனடி தம் பேத்திக்குக் கதை சொல்லலானர். முதலில் ஆலமுண்ட நீலகண்டனின் தியாக வரலாற்றைச் சொன்னர். "தாயுமிலி, தந்தையிலி, தான்தனியன்" ஆன முக்கண் அப்பன், சிரித்தே புரம் எரித்த சீலன், தன்னடக்கத்துடன் தேவர்களைக் காக்கவென்று ஆலகாலத்தை எடுத்து அருந்தினன். மற்றதேவர்களை ஒழித்திருக்கக் கூடிய அந்த விஷம் ஏன் அந்தப் புண்ணியனை ஒன்றும் செய்யவில்லை என்பதை விளக்கினர். அந்த நேரத்தில் இறைவன் மனித உடலின் விதிகளுக்குத் தன் சொரூபத்தையும் கட்டுப்படுத்தினர். ஆகவே உமையம்மையும் சிலிர்த்து 'இது என்ன விளையாட்டு' என்று அவர் கண்டத்தைத் தடவினர். விதிவிலக்காக விஷமும் கண்டத்திலேயே தங்கிவிட்டது. பெண் என்னும் பெரும் சக்தி எத்தனை பேராற்றல் மிக்கது என்பதை எடுத்துக் காட்டிவிட்டுத் தம் தெய்வ சொரூபத்துக்கு மீண்டும் ஏகினர் சிவமூர்த்தி. ஆம், தூய அன்பு மரணத்தையும் வெல்லும் என்பதுதான் தேவர்களுக்கு அவர் கற்றுத் தந்த பாடம். அமரத்துவம் வேண்டி அமுது கடைந்த தேவர்களுக்குத் தன்னுடைய நூதனமான வழியில் மீண்டும் ஒரு பாடம் நடத்திக் காட்டிவிட்டார், படைக்கலமில்லாமல் போர் புரிந்து வெற்றிபெற்ற அந்தச் சிவபெருமான்!

தம் பேத்தியை இரக்கத்துடன் பார்த்தார் சிவனடி. "குழந்தாய், நீயும் இப்பொழுது விஷத்துக்கு ஆட்பட்டுவிட்டாய். நீ பிழைக்க வேண்டுமானல் அன்பு செய்யக் கற்றுக் கொள்ளவேண்டும். இது எப்படிச் சாத்தியம் என்கிருயா? தன் மகன் ஹுமாயூன் மரணப் படுக்கையில் கிடந்தபொழுது பாபர் சக்கரவர்த்தி தன் உயிரை ஏற்று மைந்தன் உயிரைக் காக்குமாறு பிரார்த்தித்தபொழுது இறைவன் செவி சாய்த்தான் அல்லவா?" (தொடரும்)

# சனாதன தர்மத்தின் சிறப்புகள்

( திரு. V. S. நரசிம்மன் )

**மகாபாரதம் :**

"மஹத்வாத், பாரத்வாத் மஹாபாரதம் இதி-சிறப்புகள் நிறைந்து, பரந்து இருப்பதால் மஹாபாரதம்" எனக் குறிப்பிடப்படும். 'யத் ந பாரதே தத் ந பாரதே' (மகா) பாரதத்தில் எது இல்லையோ அது பாரத தேசத்தில் இல்லை-என்ற வழக்கு, இதிகாசம் பாரதீய வாழ்க்கையுடன் இணைந்தது என்று உணர்த்தும். எட்டாவது அவதாரமாகப் போற்றப் படும் ஸ்ரீ கிருஷ்ணர் மகாபாரதத்தின் நாயகர். பரம்பொருளே வெளித் தோற்றத்திற்கு அவர் வடிவாகக் காணப்பட்டது. இறைவனின் திருவிளையாடல்களே அவர் வாழ்க்கை. வாழ்க்கைத் தத்துவங்களைத் தம் வாழ்வின் மூலம் விளக்கினர். நல்ல செயல்களைச் செய்ய, தீய கர்மங்களை விலக்க மகாபாரதம் வழி காட்டுகின்றது.

இராமாயணத்தில் அறத்தின் எதிரியாகிய இராவணன் அயோத்தியிலிருந்து தொலை தூரத்தில் இருந்தான். மகாபாரதத்திலோ ஒரே குடும்பத்தைச் சேர்ந்த சகோதரர்களே ஒருவருக்கு மற்றவர் எதிரி ஆயினர். பாண்டவர்கள் தர்மத்தைப் பின்பற்றினர். அதர்மத்தை விலக்கினர்; ஆனால் கௌரவர்கள் அவர்களுக்கு இடைவிடாது இன்னல் புரிந்தனர். இத்தகைய கஷ்டத்தினின்று பாண்டவர்கள் வெற்றி பெற்ற வரலாற்றைப் பாரதம் தருகின்றது. பாண்டவர்களுக்கு மிகச் சிறந்த பக்கபலமாக ஸ்ரீ கிருஷ்ணன் விளங்கி அவர்களை வெற்றியடையச் செய்கின்றார்.

**மகாபாரதமும் ஒரு ஜீவனின் வாழ்வும்:**

ஜீவாத்மாக்கள் ஆகிய நமது வாழ்வில் நன்மை, தீமை இரண்டிற்குமிடையே இடையறாத போராட்டம் நடைபெறுகின்றது. கௌரவர்களின் எண்ணிக்கையைப் போல் தீய இயல்புகள் அதிகம்; பாண்டவர்களின் எண்ணிக்கையைப்போல் நல்ல இயல்புகள் குறைவு. ஆயினும் இறைவனின் அருளினால் தீய இயல்புகளின் ஆதிக்கத்தை எதிர்க்கின்றோம். குருக்ஷேத்திரம் நமது சரீரம்; பார்த்தனுக்குச் சாரதியாகி வெற்றியைத் தந்த ஸ்ரீ கிருஷ்ணன் நம் இதயத்தே வீற்றிருக்கின்றார். போத சொரூபமாக, மனச்சாட்சியாக நம்மை வழி நடத்திச்செல்லக் காத்திருக்கின்றார். அந்தத் தெய்வ அருட் கருணையை உணர்ந்து பிரார்த்தனை செய்வோம். மனம் பண்படாதவர்கள் அந்தராத்மாவின் குரலைக் கேட்க முடியாது. சுவாமி விவேகானந்தர் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் "நீங்கள் கடவுளைக் கண்டிருக்கிறீர்களா?" என்னும் கேள்வியைக் கேட்டார். அதற்கு ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்ததாவது: "ஆம். நான் கண்டிருக்கின்றேன். அவருடன் பேசவும் செய்கின்றேன். புறவுலகைக் காண்பதற்கு ஊனக்கண்கள் பயன்படுவன போன்று அகத்திலிருக்கும் அந்தராத்மாவைக் காண்பதற்குப் பரிசுத்தமான மனது பயன்படுகிறது. மனம் தூயதாகும்பொழுது உள்ளிருக்கும் அந்தராத்மாவோடு பேசுவதும் சாத்தியமாகின்றது. புற உலகத்தோடு தொடர்பு வைப்பதை விடத் தெளிந்த முறையில் அக உலகத்தோடு தொடர்புகொண்டு அந்தராத்மாவோடு பேசி வருகின்றேன். அந்தராத்மா எனக்குத் தெளிவான முறையில் வழிகாட்டியும் வருகின்றார்." இராமகிருஷ்ணபரமஹம்சர் போன்று மனத் தூய்மை பெறுகின்றவர்கள் அந்தராத்மாவோடு தொடர்புவைக்கலாம். அந்தராத்மாவின் குரலைக்கேட்கும் பண்புபெறுவோம். ஆன்மீகத்திற்கே உரித்தான இம்முறையைக் கையாண்டு அரசியலை, பொது வாழ்வைத் தூயதாக்கிக் காட்டினர் மகாத்மா காந்தி. நெருக்கடியான சூழ்நிலைகளில் எல்லாம் 'அகத்தே ஒலித்துக் கொண்டிருக்கும் குரல்-the inner voice within-தமக்கு வழிகாட்டியது' என்று பலமுறை அவர் கூறியுள்ளார்.

**அர்ஜுனன் கையாண்ட சரணகதி**

மிகவும் குழப்பமுற்று, மதிமயங்கி, தனது தர்மம் எது என்று உணராது பரிதவித்துக் கிடந்தான் பார்த்தன். கண்ணனிடம் தன்னை அர்ப்பணம் செய்து, ஆணவத்தை அகற்றி, அவன் அடிபணிந்தான்.

कार्पण्य दोषोपहत स्वभावः पृच्छामि त्वां धर्मसंमूढचेताः ।
यच्छ्रेयः स्यान्निश्चितं ब्रूहि तन्मे शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम् ॥

கார்ப்பண்ய தோஷோ பஹத ஸ்வபாவ:
ப்ருச்சாமி த்வாம் தர்ம ஸம்மூடசேதா:
யச்ச்ரேய: ஸ்யாந் நிச்சிதம் ப்ரூஹி தன்மே
சிஷ்யஸ்தே அஹம் ஸாதி மாம் த்வாம்
ப்ரபன்னம் — (கீதை-2-7)

''என்னுடைய இயல்பு இரக்கத்தினல் பாதிக்கப்பட்டுள்ளது; எனது தர்மம் எது என்று அறியாது மயக்கத்தில் உள்ளேன். எனக்குச் சிறப்பைத் தருவது எதுவோ அதை நிச்சயமாகப் புகட்டி அருளுங்கள். உங்களுடைய சீடன் நான். உமது பாத கமலங்களைத் தஞ்சம் அடைகின்றேன்.''

அர்ச்சுனனைச் சீடனாக ஏற்றுக் கண்ணன் நன்னெறியைப் புகட்டினர். அர்ச்சுனனைப் போல், மகாத்மா காந்தியைப் போல் நாமும் அகங்காரத்தை ஒழித்து, அகத்தே வீற்றிருக்கும் ஆத்ம சைதன்யத்தைச் சரண் அடைவோம். ஆழ்ந்த தியானத்தால் கிடைக்கும் நெறிப்படி சென்றுல் பிழை போகமாட்டோம்.

'என்றும் சத்தியமே வெல்லும்-சத்தியமேவ ஜயதே' என்பது தத்துவம். அதை வாழ்க்கையில் மெய்ப்பித்துக் காட்டியவர்கள் இதிகாச நாயகர்கள். இந்தக் காப்பியங்களைப் படித்து, மனதில் புத்துணர்ச்சி பெற்று, அறத்தின் வழி நிலைநிற்கும் வலிவைப் பெறவேண்டும். அத்தகைய நல்வாழ்வு சமுதாயத்திற்கும் தனிப்பட்ட ஜீவனுக்கும் பெரும் நன்மையைப் புரியும். எனவே பண்பட்ட சமுதாயத்தை உருவாக்கும் பணியைச் செய்யும் இராமாயண, பாரத இதிகாசங்கள் பாரதத்தாயால் உலகிற்கு, மனித இனத்திற்கு வழங்கப்பட்ட விலைமதிப்பற்ற பொக்கிஷம், சிறந்த நன்கொடை என்பதில் ஐயமில்லை.

**3. புராணங்கள்**

ஹிந்து தர்ம சாஸ்திரங்களில் 'புராணம்' முக்கிய இடத்தைப் பெறுகிறது. இதிகாசங்களில் சரித்திர நாயகர்களின் வாழ்வை மையமாக வைத்துத் தத்துவம் விளக்கப்படுகின்றது. ஆயினும் புராணம் முற்றிலும் கற்பனைக் கதைகளே. பதினெட்டுப் புராணங்கள் வழக்கில் உள்ளன. மனதைக் கவரும் வகையில் கதை உருவத்தில் இஷ்ட தெய்வத்தின் பெருமை வருணிக்கப்படுகின்றது. பக்தர்கள் மனதைக் கவர்கின்ற இத்தகைய புராணங்களில் பாமர மக்கள் புரிந்துகொள்ளும்படியாகத் தத்துவம் நுட்பமாக நுழைக்கப்படுகின்றது. உதாரணமாகப் 'பாற்கடலைக் கடைந்த' நிகழ்ச்சியின் மூலம் தத்துவத்தை ஆராயலாம்.

தேவர்கள், அசுரர்கள் இடையே எப்பொழுதும் யுத்தம் நடந்துகொண்டே இருக்கும். அசுரர்களின் தொல்லையைப் பொறுக்க முடியாத தேவர்கள் ஸ்ரீமந் நாராயணனைச் சரண் அடைவார்கள். அவரும் ஒரு குறிப்பிட்ட அவதாரத்தை எடுத்து இக்கட்டிலிருந்து அவர்களைக் காப்பாற்றுவார். ஏதாவது ஒரு சமயம் இவர்கள் இருவரும் ஒன்று சேர்ந்து ஒரு குறிப்பிட்ட லட்சியத்திற்காக ஒத்துழைப்பார்கள். அத்தகைய அபூர்வ நிகழ்ச்சியாகப் பாற்கடலைக் கடையும் சம்பவம் அமைந்தது.

மேரு மலையை மத்தாக்கி, வாசுகி என்ற சர்ப்பத்தைக் கயிருக்கி, ஆமை வடிவில் விஷ்ணு ஆதாரமாக இருக்க, பாம்பின் தலைப்பக்கம் அசுரர்களும், வால்பக்கம் தேவர்களும் நின்று பாற்கடலைக் கடைந்தனர். பலவகைத்தான அபூர்வமான பொருள்கள் அதன்மூலம் வெளிப்பட்டன. ஸ்ரீலக்ஷ்மி தேவியைத் திருமால் அடைந்தார்; சரஸ்வதியோ பிரம்மாவிற்குத் தரப்பட்டாள். கௌஸ்துபம் என்ற ஆபரணம் திருமாலுக்குக் கிடைத்தது; ஐராவதம் இந்திரனுக்குச் சென்றது. மேலும் உச்சைஸ்ரவஸ் என்ற குதிரை, காமதேனு என்ற பசு, கல்பதரு என்ற மரம் ஆகியவை சொர்க்கத்தில் பாதுகாப்பாக வைக்கப்பட்டன. விலைமதிப்பிட முடியாத உயர்ந்த பொருள்களைப் போட்டி போட்டுக்கொண்டு பலர் எடுக்க முன்வந்தனர். அப்போது திடீரெனக் கொடிய ஆலகால விஷம் வெளிப்பட்டது. அதை ஏற்க எவரும் முன்வரவில்லை. தேவர்களும், அசுரர்களும் ஓட்டம் பிடித்தனர். சுவர்க்க லோகம், மத்தியலோகம், பாதாளலோகம் என்ற மூன்று உலகங்களுக்கும் ஓடியபோதும் அவர்கள் தப்பிக்க இயலவில்லை. கடைசியில் அனைவரும் மகேசுவரனைச் சரண் அடைந்தனர். கருணை மூர்த்தியாகிய அவர் அபயம் அளித்தார். கொடிய அந்த நஞ்சைத் தாம் விழுங்கித் தொண்டையில் (கண்டம்) நிறுத்திக்கொண்டார். அதனல் அந்த இடம் கருநீலமாகி, 'நீலகண்டன்' என்ற பெயரைத் தந்தது.

# இயற்கை என்னும் போர்க்களம்

(சிவத்தொண்டன்)

**கீதையின் கோட்பாடு**

அமைதியே வடிவமான ஆழ்கடலில் ஆணி முத்து என்றும், வலம்புரிச் சங்கு என்றும், செவ்வொளி வீசும் பவளம் என்றும் பல்லாயிரம்கோடிச் செல்வங்கள் விரவிக்கிடக்கின்றன. உடலும் உள்ளமும் தளராது உற்சாகத்துடன் முயல்வார்க்கு அவை வசப்படுகின்றன. அவ்விதமே பகவத்கீதை என்னும் ஞானக் களஞ்சியமும் மாசறக்கற்ற மதிநலம் படைத்தோர்க்கு நுணுக்கமான பல பேருண்மைகளைத் தெள்ளென விளக்கிக் காட்டும். கீதை விரிவுரையில் ஆன்றோர்களால் கூறப்பட்டுள்ள நான்கு பெருங்கருத்துக்களைக் குறித்து இக் கட்டுரையில் சிறிது விளம்பப்படுகிறது. கீதை புகட்டும் பாடத்தைக் குறித்துப் பகரப்படும் அந்த நான்கு கருத்துக்கள் பின்வருமாறு :

1. கடலில் திரைகள் போன்று வாழ்க்கையில் சோதனைகள் தோன்றிக்கொண்டே இருக்கின்றன. வாழ்க்கையின் மர்மம் தெரிந்தாலொழிய அவற்றினின்று மீளமுடியாது.

2. உலகம் ஒரு விளையாட்டு மேடை. வாழ்வு ஒரு பெரிய விளையாட்டு. விளையாடுவது போன்று (விதிகளை மீருமல்) வாழ்வை எளிதாக்குபவர்க்கு அது கொண்டாட்டம்; மற்றவர்க்கு அது திண்டாட்டம்.

3. பிரபஞ்ச வாழ்க்கை ஒரு முடிவில்லாத போராட்டம். எதைப் பெற விரும்பினலும் உயிர்கள் அதன் பொருட்டுப் போராடியாக வேண்டும்.

4. ஓயாது புதிய உயிர்களாகப் பிறந்து கொண்டிருக்கிற உலகில் அவையாவும் பழைய உயிர்களாக மாறி மடிந்து கொண்டும் இருக்கின்றன. ஆக படைத்தல், காத்தல், மறைத்தல் என்ற முச்செயலும் முக்கோணம் போன்று ஒன்றையொன்று சார்ந்திருக்கின்றன. (ஸம்ஹாரம் என்ற) மரணத்தை அறிந்து கொண்டால் (ஸ்ருஷ்டி, ஸ்திதி என்ற) மற்ற இரண்டும் எளிதில் விளங்கும்.

ஆக, உலக வாழ்க்கை என்பது ஒரு பெரும் சோதனைக்கூடம் என்றும், இல்லை, அது ஒரு விளையாட்டுத்திடல் என்றும், அன்று, அது ஒரு போராட்டக்களம் என்றும், தவறு, அது முத்தொழில்கள் நிகழும் ஸ்தலம் என்றும் நான்கு வகைக் கருத்துக்கள் இயம்பப்படுகின்றன. மேலோட்டமாகப் பார்த்தால் இவை முரண்பாடான வெவ்வேறு கருத்துக்கள் போன்று தோன்றும். ஆயினும் இவை அனைத்தும் உண்மையில் ஒரு சித்தாந்தத்தையே வலியுறுத்துகின்றன. இந்தக் கொள்கையை அழகாகச் சித்தரித்துக் காட்டும் ஒரு திரைப்படத்தின் பெயர்தான் 'அழகிய மக்கள்.'

**திரை என்ற தெய்வ வரம்**

திரைப்படம் என்பது இன்று சமூக வாழ்க்கையில் இரண்டறக் கலந்துவிட்ட சாதனங்களில் ஒன்ருகும். அறியாமை மிகுந்த கீழோர் சிலர் திரைப்படம் என்பது எத்தகைய படுபாதகங்களைச் செய்தேனும் மூட மக்களை ஏமாற்றிப் பொருள் சம்பாதித்துத் தங்கள் வயிற்றை நிரப்பிக் கொள்ளவும், வக்கிரங்களைத் தீர்த்துக்கொள்ளவும் ஏற்பட்ட ஒரு வசதி மிக்க ஏற்பாடு என்ற கீழான எண்ணத்தைக் கொண்டுள்ளனர். ஆனல் அஃது அங்ஙனமன்று. சமூகத்தில் கலைத் திறனும், சான்ருண்மையும், பொறுப்பு உணர்ச்சியும் மிக்க நுண்ணறிவாளர்கள் தாங்கள் அரிதின் அறிந்த உண்மைகளை எளியவர்களும் புரிந்து கொள்ளும்படி தெளிவாகக் காட்சி விளக்கம் கொடுப்பதற்காக அமைந்த சாதனமே திரைப்படமாகும். கண்ணுக்கும் காதுக்கும் மட்டுமின்றி அறிவுக்கும் விருந்தாக அமைந்து, தனி மனிதனுடைய முன்னேற்றத்துக்கும், சமூகத்தின் ஒழுக்கத்துக்கும் எது பாலமாக அமைகின்றதோ அதுவே சிறந்த திரைப்படமாகும். மனிதன் ஆன்ம ஞானம் பெறும் பொருட்டு மனச்சாட்சி என்றும், பகுத்தறிவு என்றும், மொழியில் வல்லமை என்றும், அவதார மூர்த்திகள் உடன் உறைதல் என்றும் பலவகை வரங்களை அளித்துள்ள இறைவனே இந்த நற்கருவியையும் நமக்கு வழங்கியுள்ளான். இது மிருகமாகிய மனிதனைத் தெய்வமாக எங்ஙனம் மாற்றியுள்ளது என்பதை இனிக் காண்போம்.

**மனிதன் என்னும் மாமிருகம்**

இவ்வுலகில் தோன்றிய எல்லா உயிர்களுள்ளும் பயங்கரமான கொடூரம் வாய்ந்தது மனிதன் என்ற மிருகமே. மற்ற மிருகங்கள் தம் உணவுக்காகவும், தற்பாதுகாப்புக்காகவுமே பிற உயிர்களைக்கொல்லும். மனிதன் ஒருவனே உடல் திமிர் காரணமாகப் பிற உயிர்களைச் சிதைப்பது ஒரு வேடிக்கை என்றும், பொழுது போக்கு என்றும் கருதும் அநாகரிகம் படைத்தவன் ஆவான். சேர்ந்தாரைக் கொல்லி, தற்கொல்லி, தன் இனக் கொல்லி என்று பல இரகங்கள் மனித இனத்தில் மட்டும் தான் உண்டு. புத்திக்கூர்மையும், ஆயுதங்களும் தன்னிடத்தில் உள்ளன என்ற மமதையில் அன்னப் பட்சி போன்ற அரிதான பல ஜீவன்களை அவன் கொன்று குவித்து அடியோடு அழித்து விட்டான். எஞ்சியுள்ள பிராணிகளையும் பல காரணங்கள் கூறிச் சித்திரவதைகள் செய்வது மனிதனுக்குக் கைவந்த கலையே. வண்டி இழுக்கவும், சுமை தூக்கவும், பால், இறைச்சி தரவும், கம்பளி முதலிய தோலாடைகளுக்காகவும் வளர்க்கப்படுகின்ற பிராணிகளைப் பாரதம் போன்ற நாடுகளில் சரிவரப் பேணுவதில்லை. வெள்ளிக்கிழமையன்று மாட்டைக் குளிப்பாட்டிக் குங்குமத்திலகம் வைத்துத் தீபம் காட்டுகின்ற மனிதன், பிறகு பிண்ணுக்குச் சரிவரப் போடாமல்அதனை எலும்பும் தோலுமாக்கியும், அதன் கன்றுக்குட்டியைக் கொன்று வைக்கோல் அடைத்தும் கொடுமைகள் செய்கிறான். உயிர்க்காட்சி சாலைகளில் கொடூரமான சிறைகளில் அடைத்துச் சரியாக உணவு அளிக்காமல் அவற்றை வாட்டுவதும் இந்த அரக்கனே. சர்க்கஸ் என்ற பெயரில் பிராணிகளைச் சற்றும் பொருந்தாத பணிகளில் ஈடுபடுத்திப் பணம் சம்பாதிப்பதும் இவனே. மேலைநாடுகளில் விஞ்ஞான ஆராய்ச்சி என்ற பெயரில் ஆய்வுக் கூடங்களில் பிராணிகளின் உறுப்புக்களை அறுத்தும், விஷ மருந்துகளைச் செலுத்தியும், இன்னும் பல விதங்களில் வதைத்தும் தனது மிருக பலத்தை நிரூபிப்பது மனிதன் என்ற இந்த மிருகமே. இன்றும் காடுகளை அழித்தும், நீரிலும் காற்றிலும் அசுத்தங்களைக் கலந்தும் சூழ்நிலையை நாசமாக்குவதும் இந்த மூடனேதான்.

**திருந்திய மனிதன் தெய்வமாகிறான்**

காலப்போக்கில் மனிதன் தன் தவறுகளை உணர்ந்து திருந்தி வருகிறான். மிருகங்களைக் கண்மூடித்தனமாகக் கொன்று குவிப்பது தவறு; அவை இனப்பெருக்கம் அதிகரித்தால் பயிர் பச்சைகளை நாசம் செய்தால், நோய்களைப் பரப்பினால், கொலை வெறிகொண்டு அலைந்தால் அத்தகைய மிருகங்களை மட்டுமே உயிரைப் போக்கலாம் என்று இன்று சட்டங்கள் வந்துள்ளன. மிருகங்கள் கொடுமை செய்யப்படுவதைத் தடுப்பதற்குச் சட்டங்களும், சங்கங்களும் இயங்கிவருகின்றன. 'காக்கை குருவி எங்கள் ஜாதி'; "தின்னவரும் புலி தன்னையும் அன்போடு சிந்தையில் போற்றிடுவாய்; அன்னை பராசக்தி அவ்வுருவாயினள் அவளைக் கும்பிடுவாய்"—முதலிய கருத்துக்களைப் புரிந்துகொண்டு மனிதன் செயல்படுகிறான். பிராணிகளைத் துப்பாக்கியால் சுட்ட காலம் போய், இப்பொழுது திரைப்படக் கருவிகளால் படமெடுக்கிறான். அவற்றின் வாழ்க்கை முறைகளைப் புரிந்துகொண்டு அவற்றை அனுதாபத்துடன் நோக்கவும், அவற்றின் வேடிக்கைகளை ரசித்து மகிழவும் அவன் கற்றுக்கொண்டு விட்டான். பிராணிகளைக் கூண்டிலடைப்பது காட்டுமிராண்டித்தனம் என்பதை உணர்ந்து, இப்பொழுது அவற்றுக்கு இயல்பான இயற்கைச் சூழலில் அவற்றைச் சுதந்திரமாக உலாவ விட்டுத் தான் கூண்டு வண்டியில் பாதுகாப்பாக இருந்துகொண்டு Safari எனப்படும் சுகமான அனுபவத்தைப் பெறுகிறான். இந்தியாவில் ஐதராபாத் என்ற நகரத்தில் உள்ள உயிர்க்காட்சித் தோட்டத்தில் இத்தகைய முன்னேற்றம் இன்று ஏற்பட்டுள்ளது. இந்துக்களோ உயிரினங்களைத் தெய்வங்களாகவே வழிபடுகின்றனர். அவைகளும் தெய்வங்களை வழிபட்டதாகத் தல புராணங்கள் கூறும்.

**பிராணிகளைப்பற்றிய படங்கள்**

பிராணிகள் வசிக்கும் காடு, கடல், மலை மேடு மற்றும் பாலைவனங்களுக்குச் சென்று, அவற்றை நேரில் காண்பது எல்லாருக்கும் சாத்தியமாகாது. மாறுகச் சிறந்த வல்லுநர்கள் இங்கெல்லாம் சென்று மாதக்கணக்கில் பொறுமையைக் கடைப்பிடித்து சில சிறப்பான காட்சிகளைப் படம்பிடித்துத் திரைப்

படங்களாகத் தொகுத்துள்ளனர். மாணவர்களும், பெற்றோர்களும் உடன் சென்று காணத் தக்கவாறு அவை தரத்திலும், தகுதியிலும் சிறந்து விளங்குகின்றன. அவற்றுள்ளும் 'Hatari', 'True Life Adventures', 'Where the North Wind Blows', 'The Gods must be Crazy', 'Beautiful People' போன்ற படங்கள் வனவியல், விலங்கியல், புவியியல், வரலாற்றியல், உடற்கூற்றியல், வாழ்வியல் போன்ற பல துறைகளில் அறிவைப் பெருக்கும் கலைக்களஞ்சியங்களாக விளங்குகின்றன. நம்மை மறந்து சிரிக்க வைக்கும் பொழுது போக்குப் படங்களாகவும் அவை அமைந்துள்ளன.

**மிருகங்களும் மக்களே**

மனிதனைப் போன்றே மற்ற எல்லா ஜீவ ராசிகளுக்கும் இந்தப் புவியில் வாழ்வதற்கு உரிமையும், தகுதியும் உண்டு. ஆகவே மனித உயிருக்கும், மற்ற உயிர்களுக்கும் இடையே அன்பும், ஆதரவும், இணக்கமும் இனிய அனுபவங்களும் தோன்றி என்றும் நிலைக்கவேண்டும். ஓரினம் அழிந்தால், மற்றதும் ஒழிந்து போகும் என்ற உண்மையைப் புரிந்துகொண்டு செயலாற்றவேண்டும். பிராணிகளும் மனிதனைப்போன்ற மக்களே என்ற பேருண்மையை அழகாக விளக்கும் திரைப்படத்தின் தலைப்பே 'அழகிய மக்கள்' என்பது. மிருகங்களைப்பற்றிய திரைப்படத்திற்கு இத்தகைய தலைப்பு எவ்வாறு பொருந்துகிறது என்பதைச் சான்றுகளுடன் கீழே காணலாம்.

**தாழிவெண்ணெயும் ஊழித்தாண்டவமும்**

பேரறிவு படைத்தவர்களும் பொருத்தமாக விளக்கிச் சொல்ல முடியாத விடுகதைகள் பாரினில் பலநூறு உண்டு. இயற்கை(Nature) என்னும் விசித்திரம் அவற்றில் ஒன்று. அது என்ன நோக்கத்தோடு எதைச் செயலாற்றுகிறது; எந்த நிகழ்ச்சி எந்தத் திட்டத்தின்கீழ் நடக்கிறது - என்பதெல்லாம் ஒருவராலும் புரிந்து கொள்ளவே முடிவதில்லை. 'பரம் பொருளைக் கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்' என்றவாறு இயற்கையைப் பற்றியும் அவரவர் தத்தமக்குத் தோன்றியவாறு எடுத்து இயம்புகின்றனர். 'Beautiful People' என்ற இந்தத் திரைப்படத்தில் ஒரு காட்சியில் இயற்கையன்னை வளங்களையெல்லாம் சகல உயிர்களுக்கும் வாரி வழங்குகின்றாள். சூரிய வெளிச்சம், சுத்தமான காற்று, பரந்த புல்வெளிகள், நிறைந்த ஏரிகள், எண்ணிலடங்காத வண்ண மலர்கள், செழிப்பாக வளர்ந்துள்ள செடிகொடிமரங்கள், வயிறார உண்டு இளைப்பாறும் பல வகைப் பிராணிகளின் கூட்டம் ஆகியவைகள் பார்ப்பதற்கு மிகவும் ரம்மியமாக உள்ளன. ஒரு தாய் தாழி நிறையக் கடைந்தெடுத்த வெண்ணெயை வைத்துக்கொண்டு, குழந்தைகளைக் கைநீட்டச் சொல்லிப் 'போதும் போதும்' என்று சொல்லும் வரை அள்ளிக் கொடுப்பது போன்று அமைந்துள்ளது இக் காட்சி.

உடனே தோன்றும் வேறொரு காட்சியில் மூன்றே மாதங்களில் மாயமந்திரம் போன்று இவையெல்லாம் மறைந்தே போகின்றன. நிலம் காய்ந்து, நீர் வற்றிப் பாலையாய்ப் போகின்றது. பரந்த பூமியில் பகலவன் தன் பெயருக்கு ஏற்ப அனலாய்க் கொதித்துச் சுட்டெரிக்கின்றான். வற்றிப்போகும் தறுவாயில் உள்ள ஓடை ஒன்று எங்கோ ஒரு மூலையில் உள்ளது. மிருகங்கள் அங்கேயே தங்கிவிட இயலாது. ஏனெனில் அவற்றிற்கு உணவைத்தரும் புல்வெளி நெடுந்தொலைவில் வேறொரு இடத்தில் உள்ளது. ஆம்; முதலிற் சொன்னபடி வாழ்க்கை என்பது ஒரு சோதனைக் கூடமாகக் காண்கிறது. இப்பொழுது பிராணிகள் தங்களின் இரைக்காக உழைக்க வேண்டும். வசிக்குமிடத்தையும் சாமர்த்தியமாகத் தேர்ந்தெடுக்க வேண்டும். உணவுப் பிரச்சினை உயிர்ப் பிரச்சினையாக மாறி விட்டது. இந்தச் சோதனையில் வெற்றி பெறாத உயிர்கள் ஆங்காங்கே இறந்து போகின்றன. அவற்றின் உடலங்களைக் கழுகுகள் மொய்க்கின்றன. இதுவே வாழ்க்கையின் முதல் பாடம். வளமான சூழலில் தம் உடல் பலத்தையும், சூழலைப்பற்றிய அறிவையும் வளர்த்துக்கொள்ளாத பிராணிகள், சங்கடம் நேர்கையில் தவித்துப் போகின்றன. அவற்றின் அழிவிலே வேறு உயிர்கள் ஊட்டம் பெறுகின்றன. சோம்பலுக்கும், சுறுசுறுப்புக்கும் இடையே நடக்கும் போராட்டம் இது. வாழ வேண்டும் என்ற ஆசை மட்டும் போதாது;

வாழமுடியும் என்ற தீரமும் வேண்டும். ஆகவே மரணத்தைக் கொடுத்து அந்தப் பலவீனமான உயிர்களைப் போராட்டத்திலிருந்து மீட்கிறாள் ஊழி என்னும் சிவசக்தி. அவளுடைய ஊழிக் கூத்து அந்த நேரத்தில் பயங்கரமாகத் தோன்றுகிறது. ஆனால் அவள் உயிர்களைத் துடைப்பது அவற்றின்மீது கொண்ட மறக் கருணையினால்தான் என்பதைப் புரிந்துகொண்டால் போதும்; மனம் அமைதி அடைகிறது. இதன் பொருட்டே பிணந்தின்னும் கழுகுகளையும், ஓநாய்களையும், கழுதைப் புலிகளையும் அவள் படைத்துள்ளாள். அவை தின்று தீர்க்காவிட்டால் அந்தச் சூழலே நாறிப்போய் மற்ற உயிர்கள் வசிக்கத் தகுதியற்றதாகப் போகும் அல்லவா?

**உண்மைக் கலைஞனின் உயர்வு**

படத்தின் ஒவ்வொரு காட்சியும் இதுபோல் உயிர்த்துடிப்புடன் விளங்குகிறது. காண்பவர் கவனம் சிதறுவதில்லை. மேற்கொண்டு என்ன நேருமோ என்று ஆவலும், படபடப்புமாய் அமர்ந்திருக்கின்றனர். சிரிப்பு, கோபம், வெறுப்பு என்று பலவகை உணர்ச்சிகளை அவர்கள் முகங்கள் வெளிப்படுத்துகின்றன. வன விலங்குகளின் வாழ்க்கை என்ற போராட்டத்தில் அவர்கள் ஐக்கியமாகிப் போனார்கள் என்பது வெள்ளிடை மலையாகத் தெரிகிறது. ஆனால் காண்போருக்கு இத்தகைய நன்மைகளைச் செய்வதற்காகத் திரைப்படத்தை எடுத்தவர்கள் எவ்விதமெல்லாம் பாடுபட்டிருப்பார்கள் என்பதை நாம் எண்ணிப்பார்க்கவேண்டும். அந்த இலட்சியவாதிகள் நான்கு வருடங்களில் நூறாயிரம் (இலட்சம்) மைல்கள் பயணம் செய்தனர். தென் ஆப்ரிக்காக் கண்டத்தில் நமீப் மற்றும் கலஹாரி பாலைவனங்களில் தகிக்கின்ற வெயிலில் மாதக் கணக்கில் அலைந்தனர். பத்து இலட்சம் அடிக்குப் படம்பிடித்து மக்கள் பார்க்கும் வண்ணம் பத்தாயிரம் அடிக்கு அதைச் சுருக்கினர். இதற்கே ஒன்றரை ஆண்டாயிற்று. இதே அளவு ஆர்வத்துடன் செயல்பட்டு நமது படத்தயாரிப்பாளர்களும் தமது திரைப்படங்களின் தரத்தை உயர்த்துவார்களாக!

**அதிசயக் காட்சிகள் ஆயிரம் காணலாம்**

தேன் சிட்டு (honey bird) என்று ஒரு பறவை. அது தேன்கீரி (honey badger) என்ற பிராணியோடு தொழில் கூட்டு வைத்துக் கொள்கிறது. தேனடை இருக்கும் இடம் அதற்குத் தெரியும். ஆனால் பறவை எப்படித் தேனீக்களைச் சமாளிக்கும்? ஆகவே இந்தப் பிராணியிடம் வந்து அதைத் தொந்தரவு செய்கிறது. பொறுக்க முடியாமல் போய்த் தேன் கீரியும் அந்தப் பறவையின் பின்னே போகிறது. மலை இடுக்கில் கூட்டைக் கண்டதும் தேனீக்களைப் பொருட்படுத்தாமல் அதைப் பாய்ந்து எடுத்து வெளியே கொண்டுவருகிறது. சிறிதளவு தேனை உண்ட பின் மிகுதியைத் தேன் சிட்டுக்கு விட்டுச் செல்கிறது.

கோடையின் கொடுமையைத் துல்லியமாகக் காட்டுகிறது ஒரு காட்சி. வறட்சியினால் நீர் வேட்கை மிகுந்த பிராணிகள் அங்குமிங்கும் ஓடி அலைகின்றன. ஒரு சிங்கக் கூட்டம் சிற்றோடை அருகே மரநிழலில் ஓய்வெடுக்கின்றது. ஒரு சிறு பெண்சிங்கம் ஓடைக்குக்காவல். மான் ஒன்று எச்சரிக்கையுடன் சிங்கத்தை மீறிக் கொண்டு நீரருகே செல்ல முயல்கிறது. சிங்கம் அதை வெருட்டி விட்டுத் தன் இடத்தில் வந்து அமர்கிறது. தாகத்தில் தவிக்கும் மான் ஓடிப் போகாமல் ஓரத்தில் நின்று பார்க்கிறது. இப்பொழுது இரண்டு யானைகள் பிளிறிக்கொண்டு அங்கு வந்து சேருகின்றன. இருக்கும் சிறிதளவு நீரை ஆனந்தமாகப் பருகுகின்றன. ஒன்றும் செய்ய இயலாமல் சிங்கம் திகைத்துப்போய் நிற்கிறது. ஆமாம்! "விளையாடுவது போன்று வாழ்வை எளிதாக்குபவர்க்கு அது ஒரு கொண்டாட்டமே; மற்றவர்களுக்கு அது திண்டாட்டம்தான்."

இன்னலும், இன்பமும் கலந்ததுதான் வாழ்க்கை என்பதற்கு இன்னுமொரு எடுத்துக்காட்டு இதோ. மேகங்கள் கூடிப் பாலையை நோக்கி முன்னேறுகின்றன. ஆனால் விரைவில் அவை சிதறுண்டு போகின்றன. நீரைத் தேடித் தாய்ப்பறவைகள் பறந்து செல்கின்றன. அவற்றினால் நிராகரிக்கப்பட்ட குஞ்சுகளோ நீர்நிலை இருக்கும் திக்கை நோக்கி ஒரு நெடுந்தொலைப் பயணம் கிளம்புகின்றன. அவற்றில் பெரும்பாலானவை கானலின் வெம்மையில் மாய்ந்து போகின்றன. தப்பிப் பிழைத்த ஒருசில குஞ்சுகள் ஏக்கத்துடன்

வானத்தை நோக்குகின்றன. ஒருவழியாக மழையும் பெய்யத் தொடங்குகிறது. ஆ! அது வயிற்றிலும் உள்ளத்திலும் எத்தகைய குளிர்ச்சியை உண்டாக்குகிறது!

கவாங்கோ நதிக்கரையில் ஒரு பெருங்காடு. அதில் மருலா என்று ஒருவகைப் பழமரம். நம் நாட்டுத் தென்னங்கள்ளைப் போல அதை உண்டதும் வயிற்றில் சென்று புளித்துப்போய் ஒருவகை மயக்கத்தை உண்டுபண்ணும். வார்ட்ஹாக் என்ற பெரும் பன்றியும், காட்டானையும், பாபூன் என்ற வகைக் குரங்கும் இந்தப் பழத்தை உண்டபிறகு இரவில் மயக்கத்துடன் தள்ளாடும் காட்சியைப் பார்த்து அரங்கமே சிரிப்பலைகளினால் அதிர்கிறது. ஆமாம், மனிதர்களில் எத்தனை வகையினர் உண்டோ அத்தனை வகைகள் பிராணிகளிலும் உண்டு. மறுநாள் பொழுது விடிந்த பிறகும் தலைச் சுற்றல் தீராமல் தலைமீது கை வைத்து மலைத்திருக்கும் குரங்கே இதற்குச் சாட்சி.

ஒரு தாய் வாத்து கழுதைப் புலியிடமிருந்து தன் குஞ்சுகளை எவ்வளவு தந்திரமாகக் காப்பாற்றுகிறது! ஏதோ திரைப்பட இயக்குநர் சொல்லிக்கொடுத்து ஒரு நட்சத்திரம் நடிப்பதைப்போல அதுவும் நடிக்கிறது! குஞ்சுகளை எச்சரித்து ஒரு பக்கம் அனுப்பிவிட்டு,வேறொரு பக்கம் தனக்கு அடிபட்டுக் காயமேற்பட்டது போலவும், தான் நீரில் முழுகப்போவது போலவும் பாவனை செய்துகொண்டே கழுதைப்புலியின் கவனமெல்லாம் தன்மீதே இருக்கும்படி பார்த்துக்கொள்கிறது. குஞ்சுகள் நீரில்சென்று வளைக்குள் பதுங்கியதை அறிந்ததும் அதுவும் வேகமாக நீந்தித் தப்பிச் சென்றுவிடுகிறது. ஏமாந்த கழுதைப்புலி விழித்துக்கொண்டு நிற்கிறது. ஆம்! "பிரபஞ்ச வாழ்க்கை முடிவில்லாத போராட்டம். திறமையுடன் போராடினால் கேட்டதைப் பெறமுடியும்."

முட்டைகளைத் தின்னும் பாம்பு ஒன்றுக்கு விஷப் பற்கள் கிடையாது. ஆனால் அதன் உதடுகளின் மீது பற்கள் போன்ற அடையாளம் இருக்கும். இதையே கோபாவேசமாக எடுத்துக்காட்டிச் சீறும் அந்தப் பாம்பு. ஒரு யானையே அதைப்பார்த்துப் பயந்து பின் வாங்குகிறது. அந்தப் பாம்பு தன் தலையை விடப் பத்துமடங்கு பெரிய முட்டை ஒன்றை தன் தலைக்கும், முட்டைக்கும் ஆபத்து நேராத வண்ணம் நிதானமாக முழுமையாக விழுங்கி விட்டுப் பிறகு ஓட்டினை வெளியே உமிழ்கிறது.

மற்றொரு பாம்பின் தந்திரத்தைப் பாருங்கள். அதற்குக் கெக்கோ என்ற ஓணானைப் பிடித்துத் தின்ன ஆசை. ஆனால் இதைப் பார்த்ததும் கெக்கோ மணலுக்குள் சென்று புதைந்துகொள்கிறது. பாம்பு உடனே ஒரு தந்திரம் செய்கிறது. தன் உடலை மணலுக்குள் நன்றாகப் புதைத்துக்கொண்டு வாலின் நுனியை மட்டும் நீள வாக்கில் செங்குத்தாக வெளியே நீட்டுகிறது. அதை ஒரு நாணல் என்று கருதி ஓர் எறும்பு அதன் மீது ஊர்கிறது. எறும்பைப் பிடித்துத் தின்ன அருகே வருகிறது கெக்கோ. உடனே பாய்ந்து அதனைக் கவ்வுகிறது பாம்பு. இந்தப்பாம்பின் தன்மை தெரிந்து தான் போலும் பாபூன் குரங்கு இதைப்பார்த்த மாத்திரத்தில் தான் செத்துப்போய்விட்டதுபோல் கதறி ஒரு கணம் சவமாய்க் கீழே கிடக்கும். பாம்பு திகைக்கும் போது குரங்கு துள்ளி எழுந்து ஓடிவிடும். டிக்காப் என்ற பிராணியோ வாழ்நாளில் 95 சதவீதம் தற்காப்புக்காக ஒரு பொதியைப் போல உடல் சுருண்டு கொண்டிருக்கும். சில வகை வண்டுகள் பாலை மணலில் ஓடும்பொழுதே உடலில் குளிர்ச்சியான காற்றை உருவாக்கும். ஆகவே அவை நிற்பதேயில்லை! வாட்ஹாக் என்ற பெரும் பன்றி தன் குழிக்குள்ளோ, மலை இடுக்கிலோ நுழையும் பொழுது எப்பொழுதும் தன் பின் உடலைத் தான் முதலில் உள்ளே நுழைக்கும். அப்பொழுதுதானே கண்ணெதிரே எதிரி வந்தால் உடனே பாய்வதற்கு வசதியாக இருக்கும்! இதே நோக்கத்தில்தான் தாய்த்தேளும் தன் குஞ்சுகளை எப்போதும் இடுப்பில் சுமக்கின்றது.

புதர்மனிதர் (bush men) என்ற இனத்தார் பாலை நிலத்தில் அமைதியாக வசிக்கின்றனர். அவர்களுடைய தேவைகள் மிகக் குறைவு. ஒரு சிறு குடிசையும், ஒரு சிறு கோவணமும் அவர்களுக்குப் போதும். பாலையில் தண்ணீர் எங்கே கிடைக்கும்? அது அவர்களுக்கு மட்டும் தெரிந்திருக்கும். ஒரு சிறிய குச்சி அடையாளம் காட்ட அந்த இடத்தில் பள்ளம் பறித்து ஒரு பெரிய நீர்க்கிழங்கை அகழ்ந்

தெடுக்கின்றனர். பிறகு அதைச் சீவி வாய ருகே வைத்து நன்கு பிழிந்தால் சொட்டுச் சொட்டாகத் தண்ணீர் வருகிறது.

இன்னொரு புதர் வாசி ஒரு தந்திரம் செய் கிறான். ஒரு பாபூன் குரங்கு பார்த்திருக்க ஒரு புற்றுக்குள் சிறிது சோளத்தைக் கொட்டி விட்டு ஒளிந்துகொள்கிறான். ஆவலினால் தூண் டப்பட்ட குரங்கு புற்றில் கையை நுழைத்து விதைகளை அள்ளுகிறது. ஆனால் கையை வெளியே எடுக்க முடியவில்லை. சோளத்தை அடக்கிய முஷ்டி பெரிதாகிவிட்டது அல்லவா! புதர்வாசி ஓடிவந்து அதை விடுவித்து ஒரு மரத்தில் கட்டிப்போட்டு உப்புப் பண்டங் களைத் தின்னக் கொடுக்கிறான். முன்பின் பாலை நிலத்தில் உப்பைப் பார்த்தறியாத குரங்கும் ஆவலோடு அதை உண்கிறது. சிறிதுநேரத் தில் நா வறட்சி உயிரையே வாட்டுகிறது. இதுதான் சமயம் என்று அதை அவிழ்த்து விட்டு அதன் பின்னே ஓடுகிறான் புதர்வாசி. அது தண்ணீர் பருகுகையில் மலைத்தொடரில் மறைந்து கிடந்த ஓர் ஊற்றைக் கண்டுபிடித் துத் தானும் வேட்கையைத் தணித்துக்கொள் கிறான்.

'விண்ணவர் மயக்கம்' என்ற படத்தில் புதர்வாசிகளின் அமைதியான குடும்பவாழ்வை ஒரு 'கோக்காகோலா' போத்தல் வந்து அலக் கழிக்கிறது. வானிலிருந்து விழுபவை எல் லாம் மண்ணவர் தேவைக்காக விண்ணவர் சொரியும் வரங்கள் என்று நம்புகிறான் குடும் பத்தலைவன். தற்செயலாக அந்த வழியே பறந்த ஒரு விமான ஓட்டி குளிர்ப்பானத்தைப் பருகிவிட்டுப் பாட்டிலைக் கீழே வீசுகிறான். மணலில் விழுந்த அதைக் கண்டெடுத்துக் குடும் பத்தில் ஒவ்வொருவரும் தண்ணீர் பிடிக்க, ஊதி இசையொலி எழுப்ப, நாரினை அடித்துத் துவட்ட என்று அதற்குப் பல உபயோகங் களைக் கண்டுபிடிக்கின்றனர். ஒரே சமயத்தில் அது எல்லாருக்கும் தேவைப்படுகிறது. சண்டை என்றால் என்ன என்றே அறிந்திராத அக்குடும்பத்தில் பெண்களும், குழந்தைகளும் அந்தப் போத்தலால் ஒருவரை ஒருவர் அடித் துக்கொள்கின்றனர். அதைக் கண்காணாத இடத்திற்கு மலைச்சிகரத்திற்கு எடுத்துச் சென்று வான்முகட்டில் வீசி எறிகிறான் அந் தப் புதர்வாசி. இடையில் எத்தனை எத்தனை சம்பவங்கள்! அவனுடைய நாகரிகமே உயர் வானது என்பதை முடிவில் நாமும் புரிந்து கொள்கிறோம்.

அதோ அந்தப் பச்சோந்தியைத்தான் பாருங்களேன். என்ன விசித்திரமான கண் அமைப்பு! வலக்கண்ணும் இடக்கண்ணும் சுழல் விளக்குகள் போலத் தனித்தனியே எல் லாக் கோணங்களிலும் இஷ்டம்போல் சுற்று கின்றன! வலக்கண் செய்வதை இடக்கண் அறிவதில்லை. அந்தக் கண்களுக்குத்தாம் ஓடு போன்ற எத்தனை பெரிய பாதுகாப்பு! மீர்காட் என்ற பிராணிகளைப் பாருங்கள். கொடிய விஷமுடைய ராஜ நாகத்தைக்கூடத் தோழன் என்று கருதி அருகில் நெருங்கிப் பார்க்கின்றன.

அதோ அந்தத் தீக்கோழிதான் எத்தனை உயரம்! தான் தூரத்தில் மேயும்போதும் தான் குழியில் இட்டுள்ள முட்டைகள் மீதே கவனமாக இருக்கிறது. ஒரு முட்டையைத் திருடிக்கொண்டு ஓடும் குரங்கு அதனிடம் என்ன பாடுபடுகிறது! கடைசியில் கையைச் சிருய்த்துக்கொண்டதுதான் மிச்சம். முட்டை யைப் பிடுங்கிக்கொண்டு போய்விடுகிறது தீக் கோழி! ஒரு கொம்பில் சிறகுகளைச் செருகி தீக்கோழிபோல் பாவனை செய்துகொண்டு அருகில் வருகிறான் ஒரு காட்டு வாசி. ஆனால் அவனை இனங்கண்டுகொண்டு எப்படி விரட்டு கிறது அந்தத் தாய்க் கோழி! கடைசியில் முட்டைகள் பொரித்துக் குஞ்சுகள் வெளிவந்து தட்டுத் தடுமாறி நடப்பது எவ்வளவு ஆனந்த மயமான காட்சி!

ஒரு சிறு குரங்குக்குத் தன் தங்கையின்மீது தான் எத்தனை பாசம்! காட்டாற்று வெள்ளத் தில் சிக்கிக் கொண்டு விட்ட அதனை மீட்டு உடலோடு அணைத்துப் பயத்தைப் போக்கு கிறது. ஒரு தாயைப் போலத் தன் வயிற்றில் ஏந்திக் கரையை அடைகிறது. வேட்டை மிருகங்களிடமிருந்து காப்பாற்றித் தன் தாயி டம் கொண்டு போய் எத்தனை பரிவுடன் ஒப் படைக்கிறது!

இதோ இரண்டு ராக்கூன்கள். ஒன்று மக்கு; மற்றது புத்திசாலி. மக்கு தனக்குக் கிடைத்த முட்டையை உடைக்கத் தெரியாமல்

மணலில் புரட்டிப் புரட்டிப் போடுகிறது. புத்திசாலியோ முட்டையை ஒரு பாறையின் மீது விட்டெறிந்து உடைத்துச் சாப்பிட்டுத் திருப்தியடைகிறது.

இதோ இயற்கையன்னையின் மற்றுமொரு கோர தாண்டவம். நெசவாளிப் பறவைகள் (Weaver birds). பல குடும்பங்கள் ஒன்று சேர்ந்து ஒரு மரத்தின் உச்சியில் பெரிய அளவில் கூடுகட்டி வாழ்கின்றன. குடிசைபோன்ற அந்தக் கூட்டில் நூற்றுக்கணக்கான சின்னஞ்சிறு வாசல்கள். ஒருநாள் அதன்மீது அளவில் பெரிய பனித்துளி ஒன்று விழுகிறது. நடுப்பகலில் சூரியனின் கிரணங்கள் நேராக அந்தத் திவலையின் மீது பாய்ந்து கீழே காய்ந்து கிடக்கும் புல்லின்மீது தீப்பற்றச் செய்கின்றன. அவ்வளவுதான். நூறு வருடங்களாக நூறு குடும்பங்களுக்கு மேல் குடியிருந்த வீடு ஒரு சில நிமிடங்களில் குஞ்சு குளவான்களுடன் எரிந்து போகிறது. தாய்ப்பறவைகள் கிரீச்சிடுவது நம் நெஞ்சத்தை எரிக்கிறது.

ஆமாம்! 'ஓயாது புதிய உயிர்களாகப் பிறந்து கொண்டிருக்கிற உலகில் அவையாவும் பழைய உயிர்களாக மாறி மடிந்து கொண்டும் இருக்கின்றன.' மரணத்தை நாம் அறிந்து கொண்டால், ஸ்ருஷ்டி, ஸ்திதி என்ற மற்ற இரண்டும் நமக்கு எளிதில் விளங்கும். இதுவே இயற்கை என்னும் போர்க்களம் நமக்கு அளிக்கும் பாடமாகும்.

அகிலாண்டங்கள், பிரமாண்டங்கள், சராசரங்கள் ஆகிய அனைத்தையும் படைத்துக் காத்து அவற்றின் உள்ளே ஊடுருவி நிற்பவன் இறைவன். அவனுடைய படைப்புக்குச் சிருஷ்டி, பிரபஞ்சம், பேரம்பலம், பிரகிருதி, பசு, இயற்கை என்றெல்லாம் அவரவர் உணர்ந்த வகையில் பெயர்கள் சூட்டியுள்ளனர். 'என்று நீ அன்று நான் உன்னடிமை அல்லவோ' என்றவாறு இறைவன் வேறு, ஆன்மா வேறு அல்ல; இரண்டும் ஒன்றே. ஆன்மா தன் தகுதிக்கு ஏற்பப் பல பிறவிகளில் பல உடலங்களில் பயணம் செய்கின்றது. இப்பிரபஞ்சத்தில் பெறுகின்ற அனுபவங்கள் பரத்தை அறிவதற்கு உதவுகின்றன. "புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப், பல் விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக் கல்லாய், மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய், வல் அசுரராகி, முனிவராய்த் தேவராய்ச் செல்லாஅ நின்ற இத்தாவரச் சங்கமத்துள், எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான் மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்" என்று, மணிவாசகப்பெருமான் பிறவியின் தன்மையைக் கூறுகின்றார்.

இந்தப் பேருண்மைகளையெல்லாம் வேதம் படித்த நம்மைவிடக் கானகத்தில் வாழும் விலங்குகளே நன்கு புரிந்துகொண்டு பின்பற்றுவதாகத் தோன்றுகிறது. உணவு, உறையுள், உறக்கம், உற்பத்தி, உயிர்ப்பாதுகாப்பு இவற்றுக்காகச் சோதனை, விளையாட்டு, போராட்டம், உயிர்க்கொலை ஆகிய அனைத்து நிலைகளையும் விலங்குகள் சந்திக்கின்றன. இவையெல்லாம் முடிந்து ஓய்ந்த பிறகோ அங்கே மரண அமைதிநிலவுகிறது. இயற்கை அன்னையும் விச்ராந்தியாக இருக்கிறாள். மானும் மிருகேந்திரனும் பக்கத்துப் பக்கத்தே சாந்தமாக நிற்கும் காட்சியைத் திரைப்படத்தில் அடிக்கடி காட்டுகிறார்கள். அந்தநிலையில் அவை கயிலைக் குடும்பத்தின் வாகனங்கள் ஆகின்றன.

---

# செய்திகள்

**நிகழ்பவை**

ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுல மாணவர்கள் அக்டோபர் மாதம் 25ஆம் தேதி செவ்வாய்க்கிழமையன்று மாலை மூன்று மணிக்கு மேல் தீபாவளி விடுமுறைக்காக அவரவர்கள் ஊருக்குப் புறப்படுவார்கள்.

30-10-83 ஞாயிற்றுக்கிழமையன்று உதகையில் விஸ்வ ஹிந்து பரிஷத் நடத்தும் மாவட்ட மாநாட்டில் ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள் கலந்துகொண்டு 'இன்றைய இளைஞர்கள் விவேகானந்தர் வழியில் நின்று ஆற்றவேண்டிய பணிகள்' என்ற தலைப்பில் அருள் உரை நிகழ்த்துவார்கள்.

9-11-83 புதன்கிழமையன்று தீபாவளி விடுமுறைக்குப்பின் ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுலப் பள்ளி திறக்கப்படுகிறது.

---

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
## இயற்றிய நூல்கள்

| | | |
|---|---|---|
| திருவாசகம் | பிரசார விலை ரூ. | 23-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை 14-ம் பதிப்பு | ,, ... | 18-00 |
| மஹாபாரதம் | ,, ... | 7-00 |
| இராமாயணம் | ,, ... | 5-00 |
| ஸ்ரீ தாயுமானசுவாமி பாடல்கள் | ,, ... | 6-00 |
| ஸ்ரீராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரி | ,, ... | 5-50 |
| தினசரி தியானம் | ,, ... | 4-50 |
| ராஜயோக விளக்கம் | ... | 12-00 |
| கர்மயோக விளக்கம் | ... | 10-00 |
| பக்தியோக விளக்கம் | ... | 9-00 |
| ஞானயோக விளக்கம் | ... | 8-00 |
| பரமஹம்சரின் பெருமை | ... | 6-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... | 6-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... | 6-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—1 | ... | 5-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—2 | ... | 5-50 |
| விவேகானந்த விவரணம் | ... | 4-00 |
| சகோதரி நிவேதிதை | ... | 3-75 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண சரிதம் | ... | 3-50 |
| ஸ்ரீ சாரதாதேவியார் சரிதம் | ... | 3-00 |
| அனுஷ்டான வேதாந்தம் | ... | 3-00 |
| எதிர்கால இந்தியா | ... | 3-00 |
| திருக்கயிலாயகிரி யாத்திரை | ... | 3-00 |
| பஜனைப்பாடல்கள் | ... | 3-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | ... | 2-50 |
| தாயுமானவர் இயற்றிய | | |
| கருணாகரக் கடவுள் | விரிவுரை ... | 3-50 |
| பரிபூரணானந்தம் | ஷை ... | 3-00 |
| சின்மயானந்த குரு | ஷை ... | 3-00 |
| ஆனந்தமானபரம் | ஷை ... | 3-00 |
| சுகவாரி | ஷை ... | 3-00 |
| மௌனகுரு வணக்கம் | ஷை ... | 3-00 |
| எங்கும் நிறைகின்றபொருள் | ஷை ... | 2-50 |
| மலைவளர் காதலி | ஷை ... | 1-50 |
| பரசிவ வணக்கம் | ஷை ... | 1-00 |
| கண்ணன் என்னும் கடவுள் | ... | 2-50 |
| அறம் வளர்த்த நம்பி | (நாடகம்) ... | 2-50 |
| ஹரிச்சந்திரன் | ஷை ... | 2-00 |
| பாதுகாபட்டாபிஷேகம் | ஷை ... | 1-75 |
| விரதவீரர் பீஷ்மர் | ஷை ... | 1-50 |
| விபீஷணன் சரணாகதி | ஷை ... | 1-50 |
| பரமஹம்சர் பாமாலை | ... | 1-50 |
| காயத்ரீ | ... | 1-50 |
| நன்மக்களைப் பெறுதல் | ... | 1-50 |
| மாணாக்கன் | ... | 1-25 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? | ... | 1-25 |
| சைவன் யார்? | ..., | 1-25 |
| இறைவணக்கம் | ... | 1-00 |
| குழந்தைகளின் களிக்கூடம் | ... | 1-00 |
| இராவண தத்துவம் | ... | 1-00 |
| வாலி மோட்சம் | (நாடகம்) ... | 1-00 |
| தவப்புதல்வர்கள் | (நாடகம்) ... | 1-00 |

| | | |
|---|---|---|
| ஏகலைவ்யனின் குருபக்தி | (நாடகம்) ... | 1-00 |
| தானவீரன் கர்ணன் | (நாடகம்) ... | 1-00 |
| மார்க்கண்டேயன் | (நாடகம்) ... | 1-00 |
| பிரஹ்லாதன் | (நாடகம்) ... | 1-00 |
| தபோபலன் | (நாடகம்) ... | 1-00 |
| பார்வதி,லக்ஷ்மி,சரஸ்வதி கர்வபங்கம் | ... | 1-00 |
| இந்துமதமும் கிறிஸ்துவமதமும் | ... | 1-00 |
| நோய்க்கு இடம் கொடேல் | ... | 1-00 |
| *ஆத்ம சக்தி | ... | 1-00 |
| *சக்தி தத்துவம் | ... | 0 90 |
| *சூரியநாராயணன் | ... | 0-75 |
| தெய்வீக மகிமைகள் | ... | 0-75 |
| *ஆலய வழிபாடு | ... | 0-75 |
| *சிவதத்துவம் | ... | 0-70 |
| *மனிதனது நிஜசொரூபம் | ... | 0-70 |
| தாயுமானவர் ஆலயத்தில் தத்துவ அமைப்பு | ... | 0-60 |
| நன்னெறிகளும் அருள்வாக்குகளும் | ... | 0-60 |
| *கணபதி | ... | 0-60 |
| *முருகக்கடவுள் | ... | 0-50 |
| விஷ்ணு தத்துவம் | ... | 0-50 |
| கர்மகாண்டம் எது? ஞானகாண்டம் எது? | | 0-50 |
| வர்ணாச்ரம தர்மம் | ... | 0-30 |
| அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் | ... | 0-30 |
| விவேகானந்தரின் வீர கர்ஜனை | ... | 0-30 |
| கந்தர் அநுபூதி | ... | 0 25 |
| The Bhagavad Gita (11th Imp.) | ... | 24-00 |
| Tirukkural (with plastic cover) | ... | 8-00 |
| The Indian National Education | ... | 8-00 |
| Ramakrishna lives Vedanda | ... | 8-00 |
| Mahaveer Sri Hanuman | ... | 7-75 |
| The Bhagavad Gita (Small Size) | ... | 6-00 |
| Man Making Message | ... | 7-00 |
| Ramayana (with plastic cover) | ... | 7-00 |
| Mahabharata ,, | ... | 6-00 |
| Daily Divine Digest (DELUXE) | ... | 6-00 |
| Daily Divine Digest (Ordinary) | ... | 4-00 |
| Sri Krishna-The Manifest Divinity ,, | ... | 6-00 |
| Facets of Brahman or The Hindu Gods | ... | 5-00 |
| Sri Vishnu Sahasranama Stotram | ... | 4-00 |
| Siva Sahasranama Stotram | ... | 3-50 |
| Bheeshma The Superman | ... | 3-50 |
| Hinduism Hosts Christianity | ... | 3-00 |
| *Introducing the Gita | ... | 2-00 |
| Holy Bible—In the Light of Vedanta | ... | 1-50 |
| Reminiscences of Master Mahashaya | ... | 1-50 |
| The Garland of Paraaparam | ... | 1-50 |
| *Key to Higher Life | ... | 1-25 |
| *The student | ... | 1-25 |
| The Teacher | ... | 1-00 |
| The School | ... | 1-00 |
| The Nursery School | .. | 1-00 |

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் இயற்றிய

# பிரசார விலையில் "தினசரி தியானம்"

நாளுக்கோர் நற்சிந்தனை அன்பர்களின் ஆத்மீகத் தோழன்.

அக்டோபர் 17 ஐப்பசி 1

சமம்

தேங்கிய நீரில் திங்களின் பிம்பம் தென்படுவது போன்று அமைதியுற்ற உள்ளத்தில் அண்ணலே, உன் திருக்காட்சி தென்படுகிறது.

தத்தளித்துக்கொண்டிருக்கும் நீரில் மனிதன் தனது பிம்பத்தையோ, ஒரு மரத்தின் பிம்பத்தையோ, சந்திரனது பிம்பத்தையோ சரியாகக் காண முடியாது. அலைந்துகொண்டிருக்கும் மனதில் உண்மை ஒளிர்வதில்லை. சமம் என்பது மனம் அடங்கிய நிலை. ஞானத்துக்கு அது முற்றிலும் அவசியமானது.

ஒன்றைநினைந் தொன்றைமறந் தோடுமனம்
எல்லாம் நீ
என்றறிந்தால் எங்கே இயங்கும் பராபரமே.

— தாயுமானவர்

291

★ ★



Edited by SWAMI NITHYANANDA,

Printed & Published by Swami Sankarananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.